திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்

## விண்ணப்பம்

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் 'ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம்' ஒன்று ஏற்படுத்தப்பட்டு, அது அண்மையில் தேவஸ்தானத்தின் 1993ஆம் ஆண்டு வைரவிழா ஆண்டு ஒட்டி, பக்தர்களுக்காகத் தொடங்கி வைக்கப் பட்டுள்ளது. இந்தியக் கட்டிடக்கலை மற்றும் நவீன கட்டிடக் கலையைப் பின்பற்றி கட்டப்பட்ட மாபெரும் கட்டிடத்தில் இந்த மையம் தற்போது செயல்பட்டு வருகிறது. இந்து சமயத்தின், இந்திய மண்ணின் பெருமை பேசும் வேதங்கள், உபநிஷதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள், தத்துவங்கள், சாஸ்திரங்கள் மற்றும் பகவத்கீதை ஆகியவற்றின் சம்பந்தமான அரிய நூல்கள், ஆவணங்கள் இந்தக் கட்டிடத்தில் இடம்பெற்றுள்ளன. சனாதன தர்மமான இந்து சமயத்தின் பெருமை பேசும் இந்தியக் கலாசாரம், தத்துவங்கள், சமயப் பிரிவுகள், இசை போன்றவற்றின் சம்பந்தமான ஆராய்ச்சிகள் மேற்கொள்ளவும், உரைக்கோவைகள், கருத்தரங்குகள் நடைபெறவும் இந்த மையம் செயல்படும். இந்து சமயம் சம்பந்தமான அரிய , இதுவரை வெளியிடப்படாத ஆராய்ச்சிக் கருத்துக்களும்; சம்ஸ்கிருத மொழியில் உள்ள மூல சமய நூல்கள், மொழிப்பெயர்ப்புகள் அடங்கிய நூல்களை வெளியிடுதலும் இந்த மையத்தின் பெரு முயற்சியாக அமையும். நவீன அச்சகம் ஒன்றினை நிறுவும் எண்ணமும் மேலாண்மையின் பரிசீலனையில் உள்ளது. எனவே, இந்தியக் கலாசாரக் கோயிலாகவும், தலைசிறந்த கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனங்களுக்கு ஒரு முன்னோடியாகவும் இந்த மையம் திகழ்ந்திடவே மேலாண்மை பெருமுயற்சி எடுத்து வருகிறது. இத்திட்டம் முழு அளவில் வெற்றிபெற, தகுந்த ஊக்கமும், ஆக்கமும், அடிப்படை தேவையாகிறது.

ஆகவே இந்த நூலகத்திற்குத் தாராளமான நன்கொடை அல்லது நூல்கள் வழங்கிடுமாறு பொதுமக்களையும், தனியார் அமைப்புக்கள் மற்றும் நிறுவனங்களையும் மேலாண்மை தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறது. இந்த மையம் தன்னுடைய பொதுப் பணியில் மேலும் சிறந்தோங்கிட, தனிமனிதர்கள் அல்லது தனியார் அமைப்புக்கள் தங்களிடம் உள்ள இந்து சமய மற்றும் தத்துவங்கள் பற்றிய அரிய நூல்கள் அடங்கிய தனி நூலகங்களை இலவசமாக வழங்கிடவும் கேட்டுக்கொள்ளப்படுகிறுர்கள்.

எனவே தயைகூர்ந்து தாங்கள் அனுப்ப நினைக்கும் நூல்கள் அல்லது தொகையினை (வங்கி காசோலை மூலமாக) "சிறப்பு தனி அலுவர் (Officer on Special Duty), ஸ்ரீவேங்கடேஸ்வரா மத்திய நூலகம் மற்றும் ஆராய்ச்சி மையம், திருப்பதி-517502, ஆ. மா." எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பியே
நூலின்றிக் கோட்டி கொளல். --குறள்



முன்னந் திருவாய்மொழிப்பிள்ளை தாமுபதேசித்தநேர்
தன்னின் படியைத் தணவாத சொல் மணவாளமுனி
தன்னன்புடன் செய்யுபதேசரத்தின மாலைதன்னைத்
தன்னெஞ்சு தன்னில் தரிப்பவர் தாள்கள் சரண் நமக்கே.

[முன்பு திருவாய்மொழிப்பிள்ளை, தமக்கு உபதேசித்தருளிய முறையைச் சிறிதும் தப்பாமல் எடுத்துரைக்கும் சொல்வன்மையையுடைய மணவாள மாமுனிகள், இவ்வுலக மக்கள் உய்யும்பொருட்டு மிக்க அன்புடனே அருளிச்செய்த உபதேசரத்தின மாலை என்னும் நூலைக் கண்ட பாடம் செய்து தம் மனத்தே மறவாமல் நிலைக்கச் செய்யுமவர்களுடைய திருவடிகளே நமக்குத் தஞ்சம்.]

-கோயில் கந்தாடை அண்ணன்.

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.

**15-11-98** முதல்



**24-11-98** வரை

# வருடாந்திர பிரம்மோத்ஸவம்

நிகழ்ச்சி நிரல்

| நாள் | கிழமை | பகல் உத்ஸவங்கள் | இரவு உத்ஸவங்கள் |
|---|---|---|---|
| 15-11-98 | ஞாயிறு | | சேனாதிபதி உத்ஸவம் அங்குரார்ப்பணம் |
| 16-11-98 | திங்கள் | திருச்சி உத்ஸவம், துவஜாரோஹணம் | சிறிய சேஷவாகனம் |
| 17-11-98 | செவ்வாய் | பெரிய சேஷ வாகனம் | அம்ச வாகனம் |
| 18-11-98 | புதன் | முத்துப்பந்தல் வாகனம் | சிம்ம வாகனம் |
| 19-11-98 | வியாழன் | கல்ப விருக்ஷ வாகனம் | அனுமன் வாகனம் |
| 20-11-98 | வெள்ளி | பல்லக்கு உத்ஸவம், மாலை: வஸந்தோத்ஸவம் | யானை வாகனம் |
| 21-11-98 | சனி | சர்வ பூபால வாகனம் | கருட சேவை |
| 22-11-98 | ஞாயிறு | சூர்யப்பிரபை வாகனம் | சந்திரப்பிரபை வாகனம் |
| 23-11-98 | திங்கள் | திருத்தேர் | குதிரை வாகனம் |
| 24-11-98 | செவ்வாய் | பல்லக்கு உத்ஸவம், சக்ரஸ்நானம் | துவஜாவரோஹணம். |




சிறப்பாசிரியர் :
திரு. எம்.கே.ஆர். விநாயக், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி. தேவஸ்தானம்
திருப்பதி.

❋ ❋ ❋

ஆசிரியர் :
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

❋ ❋ ❋

துணை ஆசிரியர் :
திரு. வ.கோ. சொக்கலிங்கம், எம்.ஏ.,

❋ ❋ ❋

அச்சிடுபவர் :
திரு. எம். லக்ஷ்மண் ராவ்,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

❋ ❋ ❋

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri" T.T.D., Tirupati.
Phone : 22294

❋ ❋ ❋

தனிப்பிரதி ரூ. 4/-
வருடச்சந்தா ரூ. 48/-

*வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்*
*வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்*

**மலர் 29** **அக்டோபர் - 1998** **இதழ் 5**

| உள்ளுறை | பக்கம் |
|---|---|
| முதலாழ்வார்கள் வைபவம் | 10 |
| வேதாந்த தேசிகர் | 13 |
| திருமலை வரலாறு | 16 |
| காரியஸித்தி அளிக்கும் புரட்டாசி சனிக்கிழமை விரதம் | 19 |
| நாம் பண்டிகைகள் கொண்டாடுவது ஏன்? | 21 |
| பகவத் கீதை | 23 |
| வைணவத் தேனமுது | 28 |
| வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும் | 33 |
| இராமநாதர் திருக்கோயில் | 36 |
| புள்ளிருக்குவேளூர் - வைத்தீஸ்வரன் கோயில் | 41 |
| ஸ்ரீ ராமானுஜர் | 44 |



**அட்டைப்பட விளக்கம்**

முன் அட்டை : திருமலை புஷ்ப யாகம்
பின் அட்டை : ஸ்ரீ மணவாளமாமுனிகள் — சித்திரம்: கே. ஜெகதீஷ்

## உங்களுடன்....

முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பது யாவர்க்கும் அறிமுகமான அறிவுரை. ஆயினும் அதன்படி நடப்போர் இந்த யுகத்திலே மிக மிகக் குறைவே. யுகத்திற்கு யுகம் யுக தர்மங்கள் மாறி வருகின்றன. கிருத, திரேத, துவாபர யுகங்களைக் காட்டிலும் இக்கலியுக்ததிலே தர்மம் முழுமையாகச் சீரழிந்து தீய கர்மத்தினாலே விளையும் அதர்மம் தலையெடுத்து ஆடுகிறது. இதற்கு ஓர் எல்லை? முற்றுப்புள்ளி இல்லையா? எனில் இருக்கிறது. எப்பொழுது எனில், இறைஅவதாரத்தின் பலன் முடிந்திடும்போது! அவதார புருஷனுடைய விஸ்வரூபத்தைக் காண ஆவல் கொள்ளும் மனிதன் தன்னுடைய விஸ்வரூ பத்தை அறிந்து திருந்துவானாயின் இறையவதாரங்களுக்கு இம் மண்ணில் இடமில்லை. ஆகவே மனித இனம் மாதவனைக் காணவே தீச்செயல் புரிகின்றதா? என்றால் அது உண்மையே. தவறு செய்தாலன்றோ திருந்தி வாழ்வது எனும் கொள்கையில் ஊறிப்போய் உள்ளது இவ்வுலகம். இது தவறாகும், இது அழிவுப்பாதைக்கு இட்டுச்செல்லும் அற்புத பாலமாக அமைந்துவிடும். தம்மை திருத்துவதற்காக என்றோ வர இருக்கும் இறை அவதாரங்களுக்காக நாம் காலமெல்லாம் காத்திருப்பதைக் காட்டிலும், வேதப் புருஷன் இன்று நமக்காகவே விட்டுச் சென்றுள்ள வேத, இதிகாச, புராணங்களையும், சமயப் பெரியோர்கள் சொல்லியுள்ள நல்லுரைகளையும் கொண்டு நம்மை நாமே சீர்திருத்திக் கொள்வது சாலச்சிறந்தது.

இக்கலியுகத்தில் அவதாரப் புருஷர்களைக் காட்டிலும் அர்ச்சையில் எழுந்தருளியி ருக்கும் எம்பெருமான்களே சகல ஐஸ்வர்யங்களையும், மோக்ஷ சாதனங்களையும் அளிக்க வல்லவர்கள் என்பதை ஆழ்வார், ஆசாரியர்கள் வழி நின்று ஆராய்தல் அவசியம். 'அரசன் அன்று கொல்வான் தெய்வம் நின்று கொல்லும்' எனும் பழமொழி இன்று மாறி வருகின்ற காலமாகிவிட்டது. இக்கலி காலத்தில் அரசனாகிய அரசாங்கம் அன்று சொல்வதுமில்லை நின்று கொல்வதுமில்லை. செய்த குற்றத்திற்குரிய தண்டனையை குறைப்பதும், நீக்குவதுமாகிவிட்டது. ஆனால் குற்றம் புரிந்த ஒவ்வொரு ஆத்மாவையும் பரமாத்மா விடுவதில்லை. அதற்குரிய தண்டனையை அன்றே வழங்கிவருவதை நாம் கண்கூடாகக் காணலாம். அக்குற்றத்திற்கு பரிகாரம் தேடிக்கொள்ள நாம் எங்கு செல்ல வேண்டியுள்ளது? சிந்தித்துப் பாருங்கள். அர்ச்சா மூர்த்தியிடமே முறையிட்டு மன்னிப்பு கேட்கவேண்டியுள்ளது அல்லவா! எனவே அன்று அவதாரம் எடுத்தவர்களே அவ தாரம் எடுத்த அலுப்பு தீருவதற்காக இன்று நின்றும், இருந்தும், கிடந்தும் ஸேவை ஸாதிக்கின்றனர் என்பதை நாம் உணரவேண்டும்.

எல்லாம் வல்ல எம்பெருமான் உலக மக்கள் படும் பாட்டினைக் கண்டு அவர்கள் உய்வதற்கு உடலாக வேதத்தையும், ஸ்மிருதி, இதிகாச, புராணங்களையும் வெளி யிட்டருளினான். ஆனால் அந்த சாத்திரங்களை அறிவதற்குத் தேவையான தகுதி வேண்டுகையாலே அதன் மூலம் அறிவு பிறந்து சேதநர்களாகிய சம்சாரிகள் உய்வது

அரிதாயிருக்கிறபடியைத் திருவுள்ளம் பற்றி சகல சாத்திரக் கருத்துக்களையும் சுருக்கமாக இச்சேதநர்கள் அறியும்படி மும்மறையான இரகசியத்ரயத்தை அதாவது திருமந்திரம், துவயம், சரம சுலோகம் மூன்றையும் தானே ஆசாரியனாய் இருந்து உபதேசித்தருளினான். அவ்வுபதேசம் இக்கலியுக மக்களுக்கு பயனளிக்காமல் போகவே தன்னுடைய அம்சமாகவும் மற்றும் தன்னுடைய கருவிகளின் அம்சமாகவும் ஆழ்வார்களை இம்மண்ணிலே அவதரிக்கச் செய்தான். அதோடு நின்றுவிடாமல் அவர்களுக்கு மயர்வற மதிநலம் அருளி, அன்று தேவர்களுக்காக மேரு மலையைக் கொண்டுப் பாற்கடலைக் கடைந்து அமுதினை வழங்கியதைப் போல இன்று ஆழ்வார்களைக் கொண்டு அருளிச்செயல் அமுதத்தை சாதாரண சம்சாரிகள் பருகும்படிக்கு பண்ணினான் அப்பரமன். அதன்பின் அவ்வமுதத்தை எப்படி பருகவேண்டும் என்பதைப் போதிப்பதற்குப் பெருமைமிக்க ஆசாரியர்களையும் காட்டிக் கொடுத்தான் அக் கமலக்கண்ணன். சேதநர்களாகிய நாம் உய்வு பெறுவதற்கு இவ்வளவு காரியம் செய்துள்ள இறைவனிடம் நாம் இன்னும் எதைத்தான் எதிர்பார்ப்பது? ஒன்றும் இல்லை. நாம் அவனுக்கு ஆற்ற வேண்டிய கடமைகள் தான் அதிகமுள்ளன. கடமைகளா அது என்ன? ஆம், நான், எனது என்கிற அகங்கார, மமகாரங்களை விட்டு எம்பெருமானிடம் பக்தி பூண்டு, ப்ரபத்தி பண்ணி, சரணாகதிச் செய்வதே இவ்வாத்மா பரமாத்மாவிற்கு புரியும் பேருன்னதமான கடமையாகும்.

அவ்வகையிலே சரணாகதிச் செய்தவர்களை எம்பெருமான் ஒருபோதும் விடுவதில்லை. தன்னுடைய அடியாராக ஏற்றுக்கொண்டு 'பாகவதர்' அதாவது 'பகவானுக்குப் பக்தர்' எனும் உன்னத இடத்தையும் அளிக்கிறான். அடியார்களுக்கு வரும் இடரை தனக்கு ஏற்பட்ட இடராகவே கொள்கிறான். தன் அடியார்கள் செய்யும் தவற்றினையும் தவறில்லை என்கிறான். எங்ஙனமெனில்? "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்குமேல் என்னடி யாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும்" அதாவது எம்பெருமானுடைய அடியார்கள் மீது பூமகளே குற்றம் கூறினாலும் அவற்றினை மறுத்து அவர்கள் செய்யார் என்றும், சரி அப்படி செய்தாலும் நல்லதுதான் செய்தார் போ என்பாராம். எம்பெருமான் தனக்கு தீங்கிழைத்தாலும் மன்னிப்பானே தவிர தன்னுடைய அடியார்களுக்கு தீங்கிழைத்தால் மன்னிக்கவே மாட்டான். எனவே பகவத் அபசாரத்தை விட பாகதவ அபசாரம் கொடுமையானது. அதேபோல் பகவத் பக்தியைக் காட்டிலும் பாகவத பக்தி மேன்மையானது. அதற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர்கள்தான் ஆண்டாளும், மதுரகவியாழ்வாரும் ஆவர்.

பகவத் பக்தியிலே ஊறித்திளைத்தவர்கள் முதலாழ்வார்கள் ஆவர். அவர்கள் முறையே பரபக்தி, பரஞானம், பரமபக்தியை இவ்வுலகிற்கு எடுத்துக் காட்டியவர்கள். அவர்களைப் போன்று பகவத் பக்தியில் சிறந்தவர்களை அன்றும், இன்றும், என்றும் காண்பதரிது. அந்த ஞானிகளைப்போன்று சம்சாரிகளாகிய நாம் இருக்க இயலாதாகையாலே எம்பெருமானுக்கு அடியவர்களாகிய அவ்வாழ்வார்களையும், ஆசாரியர்களையும் வணங்கினாலே போதும் நாம் வீடுபேறு அடைவது திண்ணம்.



வாருங்கள்! காணுங்கள்!!

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# ஆலய தரிசனம்




திருப்பதி மற்றும அதனைச்சுற்றியுளள முக்கிய திருககோயிலகளை மிக எளிதில பக்தர்கள் தரிசிக்கும வண்ணம் தி.தி. தேவஸ்தானம் ஆலய தரிசனத்தை அறிமு கப்படுத்தியுள்ளது. ஒவ்வொரு நாளும் காலை 6 மணி, 10 ணி மற்றும மாலை 3 மணி ஆகிய நேரங்களில் திருப்பதி இரயில் நிலையததிற்குப் பின்புறம் உளள தி.தி. தேவஸ்தானத்தாரின் இரண்டாவது தரும சத்திர வளாகத்திலிருந்து இதற்கென்றே சிறப்பு பேருந்துகள் புறப்படுகினறன.

### காணும் ஆலயங்கள் :

1) ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.
2) ஸ்ரீ கல்யாணவேங்கடேஸ்வரசுவாமி திருக்கோயில், ஸ்ரீனிவாசமங்காபுரம்.
3) ஸ்ரீ அகஸ்தீஸ்வரசுவாமி திருக்கோயில், தொணடவாடா.
4) ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி திருக்கோயில், திருப்பதி.
5) ஸ்ரீ ஹரேராம ஹரேகிருஷ்ண திருக்கோயில், திருப்பதி.
6) ஸ்ரீ கோதண்டராமசுவாமி திருக்கோயில், திருப்பதி.
7) ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி திருக்கோயில, திருப்பதி.
8) வட்டார விஞ்ஞான மையம, திருப்பதி.

### பேருந்து கட்டணம் :

| | | |
|---|---|---|
| பெரியோர் | : | ரூ. 20/- (நபர் ஒருவர்க்கு) |
| சிறுர் | : | ரூ. 10/- (நபர் ஒருவர்க்கு) |

[சிறப்பு தரிசன வசதியும் செய்துதரப்படும்.]

# செய்திச் சுருக்கம்

## பவித்ரோத்ஸவம்

3-8-98 முதல் 5-8-98 வரை, மூன்று நாட்கள் திருமலையில் பவித்ரோத்ஸவம் கோலாகலமாக நடந்தது. திருமலையில் தெரிந்தோ தெரியாமலோ நடந்து வரும் பிழைகளுக்கு பரிகாரம் செய்யும் வகையில் நடக்கும் நிகழ்ச்சிதான் இந்த விழா.

இந்நிகழ்ச்சிக்கு தொடக்க விழா 2-8-98 அன்று நடந்தது. 3-8-98 முதல் நாளன்று ஹோமங்கள், திருமலையப்பனுக்கு அபிஷேகங்கள், நிவேதனங்கள் நடந்தன. பிறகு மாலையில் சுவாமி திருவீதிவலம் நடந்தது. 4-8-98 இரண்டாவது நாள் ஆலயப் பகுதியில் உள்ள அனைத்து தேவதைகளுக்கும் பவித்ரங்கள் சமர்ப்பிக்கப்பட்டன. 5-8-98 மூன்றும் நாள் பக்தர்களுக்கு பிரசாதமாக பவித்திரங்கள் அளித்தனர்.

மூன்று நாட்கள் நடந்த இந்த விழாவில் 287 பேர் கிருகஸ்தர்கள் ரூ. 750 செலுத்தி கலந்து கொண்டனர்.





## இலவசப் பேருந்துகள்

திருமலைநாதனை தரிசிக்க நடந்து செல்லும் பக்தர்களுக்கு திருமலை திருப்பதி தேவஸ்தானம், ரயில் நிலையத்திலிருந்து அலிபிரி வரை அலிபிரியிலிருந்து ரயில் நிலையம் வரை தினம்தோறும் இலவசமாகச் செல்ல பேருந்து வசதி செய்யப்பட்டுள்ளது. ஒரு நாளைக்கு 64 முறை இந்தப் பேருந்து ரயில் நிலையத்திலிருந்து புறப்பட்டு R.T.C. சென்ட்ரல் பஸ் நிலையம் வழியாக கபில தீர்த்தம், அலிபிரி அடையும். 1-8-98 அன்று இலவச பேருந்து வசதியை துவக்கி வைத்து செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே. ஆர். விநாயக் அவர்கள் நல்லமுறையில் இந்த வசதியை மக்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென கேட்டுக்கொண்டார். இந்த நிகழ்ச்சியில் பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திரு. ராதாகிருஷ்ண ராஜு, திரு. சீதாராமுலு மற்றும் போக்குவரத்து அலுவலர் ஸ்ரீரங்கநாயகுலு மற்றும் பல உயர் அலுவலர்கள் கலந்து கொண்டனர்.

## கோமாதா வழிபாடு (கோ பூஜை)

15-8-98 அன்று கோகுலாஷ்டமியை முன்னிட்டு திருமலை திருப்பதி தேவஸ்தான மாட்டுப் பண்ணை திருப்பதியில் கோமாதா வழிபாடு மற்றும் கோபாலன் வழிபாடு நிகழ்ச்சிகள் மிகவும் சிறப்பாக நடந்தது. காலை 10-30 மணிக்கு வேத ஒலிகளுடன், அலங்கரிக்கப்பட்ட கோமாதாவும் அதன் கன்றையும் செயலாட்சித் தலைவர் திரு. எம்.கே.ஆர். விநாயக் அவர்கள் வழிபாடு செய்தார். பிறகு பொறுப்பாண்மைக்குழு உறுப்பினர் திருமதி. ஈபூரி சீதாராமம்மா அவர்கள் பூஜை செய்தார்கள். பிறகு கோபால கிருஷ்ணனுக்கு அர்ச்சனைகள் நடந்தன. பால், வெண்ணை முதலிய நைவேத்யங்கள் படைக்கப்பட்டன.

கோகுலாஷ்டமியை முன்னிட்டு திருமலையப்பனுக்கு பால் கைங்கரியத்திற்கென 108 பசுக்கள் அளிப்பதற்காக அதற்குரிய தொகை ரூ. 16.8 லட்சம் ரூபாய் செகந்திராபாத்தைச் சேர்ந்த திரு.யார்மாநாகேஸ் வரராவ் அவர்கள் நன்கொடையாக அளித்தார். அவரை செயலாட்சித் தலைவர் பொன்னாடை போர்த்தி பிரசாதம் அளித்து கௌரவித்தார். இந்நிகழ்ச்சியில் மாட்டுப் பண்ணை இயக்குனர் திரு. கொண்டா ரெட்டி, மக்கள் தொடர்பு அலுவலர் திரு. சுபாஷ் கௌட் மற்றும் பல உயர் அலுவலர்களும் கலந்து கொண்டனர்.

கோலாகலமாக நடந்த கோமாதா வழிபாட்டை முன்னிட்டு தேவஸ்தான சங்கீத கல்லூரி மற்றும் அன்னமாசார்யா திட்டததுறை கலைஞர்களால் இசை கச்சேரி தர்மப் பிரசார பரிஷத்தினரால் ஹரி கதை முதலிய நிகழ்ச்கிள் நடத்தப்பட்டது. பிறகு சில குழுவினர்கள் கோலாட்டம், புல்லாங்குழல் முதலிய நாட்டிய நிகழ்ச்சிகள் நடத்தினர்.





## இணைச் செயலாட்சித் தலைவர் இடமாற்றம்

தி.தி. தேவஸ்தான இணைச் செயலாட்சித்தலைவராக ஓர் ஆண்டு காலம் பணிபுரிந்த திரு. டி. ராமகிருஷ்ணு அவர்கள் ஹைதராபாத் இண்டியன் ஓமியோபதி இயக்குனராக இடமாற்றம் செய்யப்பட்டார். அவர் 5-8-98 அன்று தனது பொறுப்புகளை தேவஸ்தான வனத்துறை காப்பாளர் திரு. வெங்கட்ராமய்யா அவர்களுக்கு ஒப்படைத்தார். இதை முன்னிட்டு பல உயர் அலுவலர்கள் அவருக்கு சன்மானம் செய்து வழியனுப்பி வைத்தனர். இவர் ஊழியர்களிடம் ஆன்மீக வளர்சிக்கு பயிற்சியளித்து சேவை செய்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. ✿





அண்மையில் திருப்பதி அன்னமாசாரியா கலாமந்திரத்தில் நடைபெற்ற 'நம்மாழ்வார்' திருநக்ஷத்திர திருவிழாவின் போது...

அண்மையில் சென்னையிலுள்ள தி.தி. தேவஸ்தான தகவல் மையத்தில் நடைபெற்ற 'ஸ்ரீராமானுஜ ஜெயந்தி' திருவிழாவில் திருமதி. எம்.எஸ். ரமேஷ் அவர்கள் உரையாற்றுகையில்.



# முதலாழ்வார்கள் வைபவம்

திரு. கே. ராமஸ்வாமி அய்யங்கார் - சென்னை.

ஐப்பசி மாதத்தில் (துலா மாதத்தில்) இந்துக்கள் அனைவரும் கொண்டாடும் தீபாவளிப்பண்டிகை வருகிறது. தீபாவளி என்பதற்கு தீபங்களின் வரிசை என்று பொருள் படும். புராணப்படி இந்தப் பண்டிகை நரகாசுரனின் அந்திமகால விருப்பப்படி கொண்டாடப்படுவதாக - தீயவர்கள் அழிந்ததைக் கொண்டாடும் நாளாக அமைந்திருப்பதை நாம் எல்லோரும் அறிவோம். விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்திற்கிணங்க இந்த மாதத்தில் அவதரித்த மூன்று முதலாழ்வார்கள் - பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் இவர்கள் ஏற்றிவைத்த தீபங்களைக் குறிக்கும் மாதத்திலே வருவதாலே இப்பண்டிகை தீபாவளி எனப்படுகிறது என்பது ஸித்தாந்தம். அதாவது முதலில் ஐப்பசி மாதத்தில் திருவோண நக்ஷத்திரத்தில் காஞ்சியில் பொய்கை ஒன்றில் பொற்றாமரையில் பாஞ்சசன்யம் என்னும் சங்கத்தின்





அம்சமாகத் தோன்றிய பொய்கையாழ்வார்,

"வையம் தகளியா வார்கடலே நெய்யாக,
வெய்ய கதிரோன் விளக்காக- செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன் மாலை,
இடராழி நீங்குகவே என்று"

என்று தொடங்கி "முதல் திருவந்தாதி" என்று வழங்கப்படும் 100 பாசுரங்களைப் பாடினார். இதனால் புற இருட்டாகிய இருள் நீங்கியது.

பொய்கையாழ்வார் அவதரித்த மறுதினம் ஐப்பசி அவிட்ட நக்ஷத்திரத்தில் எம்பெருமானுடைய பஞ்சாயுதங்களில் "கௌமோதகீ" என்னும் கதையின் அம்சமாக திருக்கடல் மல்லையில் (மஹாபலிபுரத்தில்) நீலோத்பவ புஷ்பத்தில் அவதரித்தவர் பூதத்தாழ்வார். இவர் புற இருள் நீங்கினால் மட்டும் போதாது அந்தக்கரணத்திலிருக்கும் அக இருளும் நீங்க வேண்டும் என்னும் ஆசையினாலே,

'அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக,
இனபுருகு சிந்தை யிடுதிரியா நன்புருகி
ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு
ஞானத்தமிழ் புரிந்த நான்"

என்று தொடங்கி 100 பாசுரங்கள் "இரண்டாம் திருவந்தாதி" என்று இயற்றினார். அதனால் அக இருளும் நீங்கியது.

பூதத்தாழ்வார் அவதரித்த மறுதினம் ஐப்பசி சதய நக்ஷத்திரத்திலே பஞ்சாயுதங்களில் 'நந்தகம்' என்னும் வாளின் அம்சமாக மயிலையில் (மைலாப்பூர், சென்னை) ஒரு கிணற்றில் செவ்வல்லிப்பூவில் அவதரித்தவர் பேயாழ்வார் முதல் இரு ஆழ்வார்களும் ஏற்றின விளக்குகளின் ஒளியிலே எம்பெருமானைக் கீழ்க்கண்டவாறு தரிசித்து 'மூன்றாம் திருவந்தாதியை' 100 பாசுரமிட்டருளிச் செய்தார் பேயாழ்வார்.

"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன், திகழும்



*அருக்கன் அணிநிறமும் கண்டேன் -செருக்கிளரும்*
*பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்*
*என்னாழி வண்ணன்பால் இன்று"*

இவ்வாறு முதல் இரண்டு ஆழ்வார்களும் விளக்கேற்ற அந்த ஒளியிலே ஆநந்த ஸ்வரூபியான பகவானை மூன்றுவது ஆழ்வார் கண்டதாலேயே ஐப்பசி மாதமும் ஏற்றம் பெற்றது. நாமும் தீபாவளி பண்டிகையைக் கொண்டாடுகிறோம். பன்னிரு ஆழ்வார்களிலே ஒரே மாதத்தில் (ஐப்பசியில்) அவதரித்தவர்கள் இம்மூவரேயாவர். வேறு எந்த மாதத்திலும் மூன்று ஆழ்வார்கள் அவதரித்தது கிடையாது. இனி இம் முதலாழ்வார்களின் வைபவத்தை சிறிது நோக்குவோமா?

இப்படி அயோநிஜராக அவதரித்த (தாயின் வயிற்றில் பிறவாத) இம்மூவரும் எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே (இயல்பான கருணைக்கண்ணோக்காலே) மயர்வற மதிநலம் அருளப்பெற்று, ரஜஸ், தமோ குணங்களற்றவராய், ஸத்வகுணம் மிகுந்தவராய், எம்பெருமான் விஷயத்திலே அடிமை செய்வதில் ஊன்றி நிற்பவராய், நிறைந்த ஜ்ஞாந, பக்தி, வைராக்யங்களையுடையவராய், எம்பெருமானுடைய குணங்களையே எல்லாமாகக் கொண்டவர்களாக, ஸம்ஸாரிகளோடு ஒட்டாதவர்களாக, ஒருநாள் இருந்த இடத்திலே மறுநாளிராமல் ஒவ்வொருநாள் ஒவ்வொரு ஊரில் தங்குகிறவர்களாய் ஒருவரையொருவர் அறியாதே தனித்தனியாக வாழ்ந்துவந்தார்கள்.

இப்படியிருக்கும் காலத்தில் இவர்களைக் கொண்டு திவ்யப்ரபந்தங்களை உலகம் உய்ய அவதரிக்கச்செய்ய திருவுள்ளம் பற்றினவனாய் இவர்களை திருக்கோவலூரிலே ஒருநாளிரவு சந்திக்கச் செய்தான் எம்பெருமான்.

முதலில் அவ்வூருக்கு வந்த பொய்கையாழ்வார் ம்ருகண்டு முனிவருடைய ஆச்ரமத்தின் இடைகழியில் (தேஹளீ என்று வடமொழியில் சொல்வது) சயனித்துக்கொண்டிருந்தார். அப்போது பூதத்தாழ்வார் அவ்விடத்திற்கு வந்து தங்க இடம் கேட்க "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம்" என்று கூறி பொய்கையார் அவரை வரவேற்றார். ஒருவர்க்கொருவர் தண்டனிட்டு பகவத்குண அனுபவம் செய்து கொண்டு வீற்றிருந்தனர். அப்போது அங்கு வந்த பேயாழ்வார் வெளியில் மழையும் இருட்டுமாக இருப்பதால் தங்க இடம் கேட்டார். "இவ்விடம் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம் மூவர் நிற்கலாம்" என்று கூறி பொய்கையாழ்வாரும், பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரை வரவேற்றனர். ஒருவருக்கொருவர் தண்டனிட்டு மூவரும் அவ்விடைகழியிலேயே நின்று கொண்டு எம்பெருமானுடைய குணங்களை ஒருவர்க்கொருவர் சொல்லியும், கேட்டும் மகிழ்ந்திருந்தனர். பகவான் கீதையிலே சொன்னபடி.

"மச்சித்தா மத்கதப்ராணா
போதயந்த: பரஸ்பரம் |
கதயந்தச்ச மாம் நித்யம்
துஷ்யந்தி ச ரமந்தி ச ||
(பகவத்கீதை 10ம் அத்தியாயம்
9வது ச்லோகம்)

ஜ்ஞானிகளான இவர்களோடு நெருக்கத்தை விரும்பின எம்பெருமான் அங்கு வந்து இவர்களை நெருக்கத் தொடங்கினான். "இப்படி நெருக்குகிறவர் யார்?" என்று காண்பதற்காக "வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்யகதிரோன் விளக்காக" என்று தொடங்கி முதல் திருவந்தாதியைப் பாடினார் பொய்கையாழ்வார். "அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக இன்புருகு சிந்தை யிடுதிரியா, நன்புருகி ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு ஞானத்தமிழ் புரிந்த நான்" என்று தொடங்கி இரண்டாம் திருவந்தாதியைப் பாடினார் பூதத்தாழ்வார். பிறகு பேயாழ்வார் "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தொடங்கி மூன்றாம் திருவந்தாதியைப் பாடினார்.

மூவரும் உலகுய்ய இவ்வண்ணமாக திவ்யப்ரபந்தங்களை அருளிச் செய்து, எம்பெருமானுடைய ஸ்வரூப, ரூப, குணங்களை விஸ்தாரமாகத் தாங்கள் அனுபவித்துப் பிறரையும் அனுபவிக்கச் செய்தார்கள்.

மற்ற ஆழ்வார்களுக்கு முன்னே வந்து அவதரித்து அவர்களுக்கு வழிகாட்டியாக திவ்யப்ரபந்தங்களை முதன்முதலில் அருளிய பெருமையினால் இவர்கள் முதலாழ்வார்கள் என்று பேர் பெற்றார்கள்.

முதலாழ்வார்கள் மூவரும் கூடி மூன்று திருவந்தாதிகளாலே நிர்ணயித்த அர்த்தம் ஒன்றே. முதல் ஆழ்வாரான பொய்கையாழ்வார் "வையம் தகளியா" என்று தொடங்கி "லீலாவிபூதியை"யும் "செய்ய சுடராழியான்" என்று தொடங்கி 'நித்ய விபூதியையும்' அநுஸந்திக்குகொண்டு ப்ரபந்தத்தைத் தொடங்குகையாலே உபய விபூதிகளோ

டும் கூடியவன் பரம்பொருள் என்று நிலைநாட்டினார். இரண்டாமவரான பூதத்தாழ்வார் "ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு" என்று தொடங்குகையாலே அப்பரம் பொருள் நாராயணனே என்று நிலைநாட்டினார். மூன்றுமவரான பேயாழ்வார் "திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன்" என்று தொடங்குகையாலே லக்ஷ்மீ ஸம்பந்தத்தைக் காட்டிப் பரதத்வ நிர்ணயம் செய்தார்.

முதல்வரான பொய்கையாழ்வார் "வையம் தகளியா" என்று தொடங்கி ஞானம் பிறந்த நிலையை வெளிப்படுத்தினார். இரண்டாமவரான பூதத்தாழ்வார் "அன்பே தகளியா" என்று தொடங்கி ஞானம் முற்றி பக்தியாகும் நிலையை வெளிப்படுத்தினார். மூன்றுமவரான பேயாழ்வார் "திருக்கண்டேன்" என்று தொடங்கி அந்த பக்தியாலே பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தபடியை (கண்களாலே கண்டு ஆநந்தித்த நிலையை) விளக்கினார். ஆக, மூன்று திருவந்தாதிகளும் சேர்ந்து ஜ்ஞான, பக்தி, ஸாக்ஷாத்காரங்களைச் சொல்லுகின்றன.

## வாழித்திருநாமங்கள்

### பொய்கையாழ்வார்

செய்யதுலா வோணத்திற் செகத்-
துதித்தோன் வாழியே
திருக்கச்சி மாநகரஞ் செழிக்க
வந்தோன் வாழியே
வையந்தகளி நூறும் வகுத்-
துரைத்தான் வாழியே
வனசமலர்க் கருவதனில்
வந்தமைந்தான் வாழியே
வெய்யகதிரோன் தன்னை
விளக்கிட்டான் வாழியே
வேங்கடவர் திருமலையை
விரும்புமவன் வாழியே
பொய்கைமுனி வடிவழகும்
பொற்பதமும் வாழியே
பொன்முடியும் திருமுகமும்
பூதலத்தில் வாழியே

### பூதத்தாழ்வார்

அன்பே தகளிநூறு
மருளினோன் வாழியே
ஐப்பசியில் அவிட்டத்தில்
அவதரித்தான் வாழியே
நண்புகழ்சேர் குருக்கத்தி நாண்
மலரோன் வாழியே
நல்லதிருக் கடல்மல்லை
நாதனார் வாழியே
இன்புருகு சிந்தைதிரி யிட்ட
பிரான் வாழியே
எழில் ஞானச் சுடர்விளக்கை
ஏற்றினான் வாழியே
பொன்புரையத் திருவரங்கர்
புகழுரைப்போன் வாழியே
பூதத்தார் தாளிணையிப்
பூதலத்தில் வாழியே.

### பேயாழ்வார்

திருக்கண்டேன் எனநூறுஞ்
செப்பினான் வாழியே
சிறந்த ஐப்பசியிற் சதயம்
செனித்த வள்ளல் வாழியே
மருக்கமழும் மயிலைநகர்
வாழவந்தோன் வாழியே
மலர்க்கரிய நெய்தல்தனில்
வந்துதித்தான் வாழியே
நெருக்கிடவே இடைகழியில்
நின்ற செல்வன் வாழியே
நேமி சங்கன் வடிவழகை
நெஞ்சில் வைப்போன் வாழியே
பெருக்கமுடன் திருமழிசைப்பிரான்
தொழுவோன் வாழியே
பேயாழ்வார் தாளிணையிப்
பெருநிலத்தில் வாழியே



## இராமாநுசரின் ஆச்சார்யர்கள் ஐவர்

**1) பெரிய நம்பிகள்:** (ஸ்ரீமகாபூரணர்) பஞ்ச ஸம்ஸ்காரம் இட்டருளியவர். எனவே, இவர் தலைமையாசிரியர் ஆவார்.

**2) திருக்கோட்டியூர் நம்பிகள்:** ரஹஸ்யார்த்தங்கள் உபதேசித்தார். சரமச்லோகார்த்தம் உபதேசித்தருளியது குறிப்பிடத்தக்கது.

**3) திருமாலையாண்டான்:** திருவாய்மொழிக்குப் பொருள் கூறியவர்.

**4) ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர்:** திருவாய்மொழியுடன் ஸ்தோத்ரம் முதலானவற்றுக்கு நல்வார்த்தைகள் உபதேசித்தார்.

**5) திருமலைநம்பிகள்:** (ஸ்ரீசைலபூரணர்) இராமாயணம், ஸ்தோத்ரங்கள், நல்வார்த்தைகள் உபதேசித்தவர்.

ஆச்சார்யர் ஐவரின் திருவடி பணிந்து பொருட் சிறப்பைக் கேட்டருளிய பெருமையைப் பெற்றதால், இராமாநுசர் பஞ்சாசார்ய பதாச்ரிதர் எனப்படுவார்.

தகவல்: மா. சீதாராமன் - காஞ்சிபுரம்.

# வேதாந்த தேசிகர்

திரு. ஆர். சுப்பிரமணியன் - புத்தூர்.

## முன்னுரை :

ஆன்மாக்களை உய்விப்பதற்காக பகவான் பல நிலைகளை மேற்கொள்கிறுர். அவையாவன: 1) வேதங்களையும், புராணங்களையும் வகுத்தளித்துப் படித்துப் பயனடையுங்கள் என்பது. 2) அர்ச்சாவதார மூர்த்தியாகத் திருக்கோவில்களில் எழுந்தருளி என்னை எல்லோரும் வழிபாடு செய்து உய்வு பெறுங்கள் என்பது. 3) குருவாக ஆசார்ய நிலையில் தோன்றி அஞ்ஞானத்தை அழித்து ஞானத்தை வளர்ப்பது என்பது. 4) அவதார புருஷர்களாக மண்ணிலே அவதாரம் செய்து அதருமத்தை அழித்து தர்மத்தை நிலைபெறச் செய்வது என்பது இந்நான்கு நிலைகளில் ஆசாரிய நிலையில் அஞ்ஞானத்தை அழித்து ஞான விளக்கேற்ற வேதாந்த தேசிகர் அவதாரம் செய்தார்.

## தோற்றம் :

"மாமலர் மன்னிய மங்கை
மகிழ்ந்துறை மார்பினன் தான்
தூமலர் சூடிய தொல்லருள்
மாறன் துணையடிக்கீழ்
வாழ்வையுகக்கும் இராமானுச
முனிவண்மை போற்றும்
சீர்மையன் எங்கள் தூப்புற்பிள்ளை
பாதம் என் சென்னியதே"

வேதாந்த தேசிகரின் தந்தையார் அனந்த சோமயாஜிகன். தாயார் தோதாத்திரி அம்மையார். ஆசிரியர் தாய்மாமனாகிய இராமானுசப்பிள்ளான் என்னும் கிடாம்பி அப்புள்ளார். காஞ்சிபுரத்தில் திருத்தண்கா என்னும் விளக்கொளிப்பெருமான் கோவில் சூழலில் தோன்றினார். தோன்றிய காலம் சாலிவாகன சகாப்தம் கி.பி. 1191-1268 என்பர் வரலாற்றுச்சான்றேர். வேங்கடமுடையானின் திருமணியின் அம்சம் என்று கூறுவர். வேங்கடவனின் பெருவிழா முடிந்து



நீராடும் திருநாளாகிய புரட்டாசித் திருநாளன்று மக்கள் உய்யும் பொருட்டுத் திருஅவதாரம் செய்தார். எனவே இவருக்கு வேங்கடநாத சர்மா என்ற திருப்பெயரும், வேதாந்தச்சாரியார் என்ற புனைப்பெயரும் ஏற்பட்டது. இவர் அவதாரம் செய்த திருத்தலம் தூப்புல் என வழங்கப்பெறும்.

தூப்புல் என்பது தூப்பு-தூய்மையான இல்-இடம் என்ற பொருளையும், தூய்மையான தருப்பைப்புல் என்ற பொருளையும் தருவதாக ஆன்றேர் கூறுவர். தருப்பையை விசுவாமித்திரம் என்றும் கூறுவர். விசுவாமித்திரரின் வமிசாவளியில் வ்ந்த அந்தணர் என்று காட்டுவதற்காக தூப்புல் என்று தங்கள் பெயருக்கு முன்னால் குறிப்பிடுவார்கள்.

## சமயப்பணி :

தேசிகர் இளமையில் இருபது ஆண்டுகளுக்குள்ளாகவே வேதாந்த ரகசியங்களையெல்லாம் முறைப்படி கற்றுக்கொண்டார். தனது மாமனார் கிடாம்பி அப்புள்ளாரிடம் அருளுபதேசம் பெற்று வைநதேய மந்திரத்தைக் கற்றுக்கொண்டார். காஞ்சிபுரத்திலேயே இல்லற வாழ்க்கையை மேற்கொண்டார். நாவன்மை கொண்ட தேசிகர் சிறந்த சொற்பொழிவாளராகி வேதாந்தக் கருத்துக்களை எளியவரும் புரிந்துகொள்ளக்கூடிய நிலையில் விரிவுரை செய்து வந்தார். பின்னர் தென்திருப்பதி களைத் தரிசிக்க ஆவல் கொண்டு புறப்பட்டு வந்து திருவகீந்திரபுரம் கோவிலில் தங்கியிருந்தார். அச்சமயம் அவர் கற்ற வைநதேய மந்திரத்தின் பலனாக கருடாழ்வாரின் தரிசனம் கிடைக்கப்பெற்று ஸ்ரீ அயக்ரீவ மந்திர உபதேசமும் பெற்ருர். அம்மந்திரத்தின் மகி

மையால் ஸ்ரீஅயக்ரீவர அவருக்குக் காட்சியளித்து வாக்கு வன்மையை அளித்தார். திருக்கோவிலூர் போன்ற பல திருப்பதிகள் சென்று பின்னர் காஞ்சிபுரம் வந்தடைந்தார். அங்குத் தங்கியிருந்தபொழுது நாவாற்றலால் சொற்பொழிவும், எழுத்தாற்றலால் வேதாந்த நூல்களையும் எழுதிவந்தார். உலகப் பற்றற்ற இல்லற ஞானியாகத் திகழ்ந்தார். கூரத்தாழ்வாரைப் போன்று உஞ்சவிருத்தி செய்து பெருமாளுக்குத் திருஆராதனம் செய்துவந்தார்.

## நிகழ்த்திய அற்புதங்கள் :

தேசிகர் வறுமை வயப்பட்ட ஒரு அந்தணப்பிரமச்சாரியிடம் கருணை கொண்டார். ஸ்ரீஸ்துதி என்ற நூலை அருளிச்செய்தார். அதன் பலனாக காஞ்சிபுரம் தேவப்பெருமாள் கோவிலில் தாயார் சந்நிதி முன்பாகப் பொன்மழை பொழிந்தது. கண்டோர் அதிசயித்தார்கள் அந்தண பிரமச்சாரி தனது வறுமை நீங்கி வளம் பெற்றார். தேசிகரின் பெருமை கேட்டுப் பொறாமை கொண்ட ஒருவன் இவரிடம் வந்து "உமக்குக் கிணறு வெட்டத் தெரியுமோ" என்று கேட்டான். புன்முறுவல் கொண்ட தேசிகர் அவன் முன்னாலேயே கிணறு வெட்டிக் காட்டி அவன் செருக்கை அடக்கினார். திருவகீந்திரபுரத்தில் இன்றும் அந்தக் கிணறு தேசிகரின் பேராற்றலுக்குச் சான்றாகத் திகழ்கிறது.

சிற்பி ஒருவன் இவரிடம் வந்து "உமக்குச் சிற்பம் வருமோ" என்று தருக்குடன் கேட்டான். அவனுடைய தருக்கை அடக்கத் தம்முடைய உருவத்தைத் திருவிக்ரகமாக அமைத்துக்கொடுத்தார். அந்த விக்ரகம் தேவநாதப்பெருமாள் கோவிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டு இன்றும் பக்தர்களால் வழிபாடு செய்யப்பட்டு வருகிறது.

பிறிதொரு சமயம் பாம்பாட்டி ஒருவன் இவர் முன்னிலையில் பாம்புப் பெட்டியைத் திறந்து பாம்புகளையெல்லாம் வெளியில் விட்டு விட்டான். கண்டவர்கள் கதிகலங்கி ஓடினார்கள். தேசிகர் கருட தியானம் செய்தார். பாம்புகளையெல்லாம் கருடன் வந்து பற்றியெடுத்துச் சென்றுவிட்டது. பாம்பாட்டி தேசிகரின் பாத மலர்களைப் பணிந்து செருக்கடங்கிச் சென்றான். இவ்வாறு பல அற்புதங்களை நிகழ்த்திக் காட்டினார்.

## வேதாந்தப்படைப்புகள் :

இவ்வண்ணம் பல அற்புத நிகழ்ச்சிகளை நிகழ்த்திக் காட்டிய தேசிகர் ஸ்ரீஇராமானுசர் அருளிச்செய்த ஸ்ரீபாஸ்யத்தை முப்பது முறை பிரவசனம் செய்து மனமகிழ்வு பெற்றார் என்பர். ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்ற நால்வகைக் கவிகளிலும் ஒப்புயர்வு பெற்று விளங்கியவர். தென்மொழியிலும் வடமொழியிலும் அளவற்ற பாண்டித்யம் பெற்றவர். அவர் அருளிச்செய்த நூல்கள் பல.

அவை வருமாறு 1) அயக்ரீவ ஸ்தோத்திரம் 2) கருட பஞ்சாசதத் 3) தேவநாயக பஞ்சாசதத் 4) அச்சுத சதகம் 5) கோபால விம்சதி 6) ரகுவீர கத்யம் 7) தேகளீச ஸ்துதி 8) வரதராச பஞ்சாசதத் 9) அர்த்த பிஞ்சகம் 10) ஸ்ரீவைஷ்ணவ தினசரி 11) அத்திகிரி மகாத்மியம் 12) வேகா சேதுஸ்தோத்திரம் 13) அஷ்டபுஜாஸ்டகம் 14) சரணகதி தீபிகை 15) காமாஸிகாஷ்டகம் 16) பரமார்த்த ஸ்துதி 17) அபீதிஸ்தவம் 18) சங்கல் பசூர்யோதயம் 19) மும்மணிக் கோவை 20) நவரத்தன மாலை 21) பந்துப்பா 22) சுழற்பா 23) ஊசற்பா 24) ஏசற்பா 25) அம்மானைப்பா, 26) திருச்சின்னமாலை 27) பாதுகா சகஸ்ரம் என்பன.

களப்பிரர் படையெடுப்பால் தமிழகத்தில் உள்ள கோவில்கள் சூறையாடப்பட்டன. அந்த நிலையில் திருவரங்கத்தில் அந்தணர்கள் பெருமாளுக்குப் பாதுகாப்புச் செய்து விட்டு பல திசைகளிலும் சென்று விட்டார்கள். சத்யமங்கலம், திருநாராயணபுரம் முதலிய இடங்களில் தங்கியிருந்த காலங்களில் திருவரங்கப்பெருமாளுக்கு எந்தவித இடையூறும் ஏற்படக்கூடாது என்று தேசிகரால் அபீதிஸ்தவம் என்ற நூல் அருளிச்செய்யப்பட்டது. திருவரங்கனின் திருவடி நிலையை ஆயிரம் சுலோகங்களால் பாடிப்பரவசமுற்று அருளிய நூலே பாதுகாஸஹஸ்ரம் என்பது.

## ஆழ்வார்களிடம் கொண்ட ஈடுபாடு

தேசிகர் வடமொழியில் எவ்வளவுதான் ஆழ்ங்கால் பட்டிருந்தாலும் பொருள் விளக்கங்களுக்குரிய தெளிவு பெறுவதற்கு ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்யப் பிரபந்தங்களே சிறப்புடைத்து என்ற கொள்கையுடையவர்.

"பொய்கைமுனி பூதத்தார்
பேயாழ்வார், தண்
பொருநல்வருங்குருகேசன்
விட்டு சித்தன்
துய்யகுலசேகரன் நம்பாணநாதன்

தொண்டரடிப்பொடி மழிசை
வந்த சோதி
வையமெல்லாம் மறைவிளங்க
வாள் வேலேந்தும்
மங்கையர்கோன் என்றிவர்கள்
மகிழ்ந்து பாடும்
செய்யதமிழ்மாலைகள் நாம்
தெளிய வோதித்
தெளியாத மறைநிலங்கள்
தெளிகின்றோமே"

என்று அருளினார் தேசிகர்.

வேதாந்த தேசிகருக்கு ஸ்ரீநம்மாழ்வாரிடம் அளவுகடந்த அன்பும், மதிப்பும் உண்டு.

"அந்தமில்லாப் பேரின்பம் அருந்த
வேட்கும்
அடியோமை அறிவுடனே
என்றுங்காத்து
முந்தைவினை நிரை வழியி-
லொழுகா தெம்மை
முன்னிலையாம் தேசிகர்தம்
முன்னே சேர்த்து
மந்திரமும் மந்திரத்தின்
வழியுங்காட்டி
வழிப்படுத்திவானேற்றி
அடிமைகொள்ளத்
தந்தையென நின்ற தனித்
திருமால் தாளில்
தலைவைத்தோம் சடகோபன்
அருளினாலே"

என்று தமது பாடலில் நம்மாழ்வாரின் பெருமை பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இதே போல் இராமானுசர் மீதும் எல்லையற்ற அன்பும் பக்தியும் கொண்டிருந்தார் என்பதை தேசிகர் இயற்றிய சுலோகங்கள், பாடல்கள் மூலம் அறியக்கிடக்கின்றது.

## முடிவுரை :

கோடானுகோடி விண்மீன்கள் விண்ணிலே தோன்றினாலும் பளிச்சென்று கண்ணுக்குப் புலப்படும் ஒரு சில நட்சத்திரங்களைப் போல பல மகான்கள் ஒளிவீசிக்கொண்டிருக்கின்றார்கள். அவர்களில் ஒருவர் வேதாந்த தேசிகர். இவர் கி.பி. 1369 சௌமிய ஆண்டு கார்த்திகைப் பௌர்ணமியன்று மண்ணுடு நீத்து விண்ணுடு எழுந்தருளினார்.

அவர் புகழ் என்றும் வளர்க!



## காலங்கள்

பகல் பொழுதை ஐந்து காலங்களாக சாஸ்திரங்களில் பெரியோர்கள் பிரித்திருக்கிறார்கள். அவைகள்:

1.பிராத: காலம் : காலை ஆறு மணி முதல் எட்டரை மணி வரை. இந்தக் காலத்தில் சந்தியாவந்தனம், மற்ற சுபகாரியங்கள் செய்யலாம்.

2.ஸங்கவ காலம் : காலை எட்டரை மணி முதல் பத்தேமுக்கால் மணி வரை. இந்தக் காலத்தில் பிராயச்சித்த கர்மாக்கள், 'ஏகோதிஷ்டம்' எனப்படும் பதினோராவது நாள் அபார காரியம்.

3.மத்தியாஹ்ண காலம் (அல்லது) ச்ரார்த்த காலம் : காலை பத்தேமுக்கால் மணிக்கு மேல் தொடங்கி ஒருமணி வரை. இக்காலத்தில் ச்ரார்த்தம் போன்றவைகள் செய்யலாம்.

4.அபராஹ்ண காலம்: காலை பத்தேமுக்கால் மணிக்குமேல் தொடங்கி ஒருமணிவரை. இக்காலத்தில் ச்ராத்தும் போன்றவைகள் செய்யலாம். சபீண்டி கரணம் போன்ற கர்மாக்கள் செய்யலாம்.

5.சாயங்காலம்: மாலை நாலரை மணிக்குமேல் மாலை ஆறு மணிவரை. இக்காலத்தில் சாயங்கால பூஜைகள் செய்யலாம்.

பொதுவாக ஒரு காலத்திற்கு 6 நாழிகை வீதம் பகல் 30 நாழிகள் 5 காலங்களாகப் பிரிக்கப்படுகின்றன.

தொகுப்பு: என்.சி. கோபாலன் - சென்னை.

(தொடர் கட்டுரை)

# திருமலை வரலாறு

ஆங்கில மூலம் : திரு. சாது சுப்பிரமணிய சாஸ்திரி

தமிழாக்கம் : திரு. அ. நடராஜன்

## அத்தியாயம் 2

### சுவேத வராக கல்பத்தின் கதை

[பாதாள உலகிலிருந்து பூமியை ஸ்ரீவராகர் மீட்பதும் கருடன் (கிரீடாத்ரி மலையை) விளையாட்டு மலையை ,பூமிக்குக் கொண்டுவருவதும்]

(வராக புராணம், பகுதி 1, அத்தியாயங்கள் 1 மற்றும் 3)

படைப்புக் கடவுளாகிய பிரமனுக்கு ஒரு பகலும் ஒரு இரவுமாகக் கருதப்படும் இரண்டாயிரம் சதுர்யுகங்களின் (எட்டாயிரம் யுகங்களின்) போது, சூரியன் தனது எரிக்கும் கிரணங்கள் வாயிலாக நெருப்பை உமிழ்ந்த வண்ணம் இருந்தான். நீண்ட பல ஆண்டுகளாக மழையே இல்லாதிருந்தது. அதன் விளைவாக, பிரமாவிற்கான இரவு நெருங்கும் போது, மனிதர்களும் தங்களுடைய கடும் தவத்தினால் ஆன்ம ஞானம் பெற்ற தவச் செல்வர்களும் பூமியை விட்டு, (ஏழு மேலுலகுகளில் ஒன்றான) ஜனலோகத்தில் புகலடைந்தனர்.' காடுகளும் மலைகளும் மாபெரும் தீயினால் எரிந்து சாம்பலாயின. பின்னர், காற்றுக்கடவுளான வாயு நீண்ட பல வருடங்களாகத் தீவிரமாக வீசியதால் மேகங்கள் உருவாகி, இடைவிடாது கனத்த மழை பொழிந்தது. அதனால் பூமி நெகிழ்ந்து பாதாள லோகத்தில் அமிழ்ந்து போயிற்று. அது பிரமனின் அந்த இரவின் ஒரு பகுதியின் போது ஆயிரம் யுகங்களாக அதே நிலையில் இருந்தது. அதன் காரணமாக பிரளய கல்பம் (ஊழிப்பெருவெள்ளம்) ஏற்பட்டது.

அதுபோது, உயிர், பொருள் இரண்டையும் படைத்தும், காத்தும், அழித்தும் வருபவரான விஷ்ணு மாபெரும் நீர்ப்பரப்பின் மேல் ஆலிலை ஒன்றின் மீது வடபத்ரசாயி அல்லது ஆலிலையில் படுத்திருப்பவராக மஹர் (மகா.) லோகத்தில் கிடந்திருந்தபோது, பூமியை மீட்டு, மீண்டும் படைப்புத் தொழிலை மேற்கொள்ள எண்ணினார். எனவே, பயங்கரமான வெள்ளை வராக உருவினை எடுத்துக்கொண்டு அதைத் தேடிப் பாதாள உலகுக்குச் சென்று கீழுலகின் தலைவனான இரண்யாக்ஷனுட



னுடனும் அவன் தம்பியுடனும் நெடுங்காலம் போரிட்டு, எரிச்சலடைந்து அவ்விரண்யாக்ஷனின் மலைபோன்ற உடலைத் தமது நீண்ட கூரிய கொம்புப் பற்களினால் இரண்டாகப் பிளந்தார். அரக்கனின் உடலிலிருந்து பெருகிய குருதி நீருடன் கலந்து அதைச் சிவப்பாக்கியது. சுவேத வராகர் நீரை அடித்து, அடியில் இருந்த பூமியைத் தமது கொம்புப் பற்களினால் வெளிக்கொணர்ந்தார். ஆதிசேஷனின்மீது ஒருகாலை ஊன்றி, ஒரு மாமலை போன்று ஜனலோகத்தில் நிமிர்ந்து நின்றார். உடனே, பிரமனும் தேவர்களும் புனித மனிதர்களும் வேத மந்திரங்களை ஓதிப் போற்றிப் புகழ்ந்து, பூமியை முன்போலவே இருக்கச் செய்யுமாறு வேண்டினார்.

வராகப் பெருமானும் பூமியை நிலைநிறுத்தி ஏழு சமுத்திரங்களையும் ஏழு உலகுகளையும் முன்போலவே வரையறுத்து அமைத்தார். அடுத்து, அவர் பிரமனை அழைத்து, ஜகத்தினை முன்போலவே படைக்குமாறு கூறினார். மக்களைக் காப்பாற்றும்பொருட்டு அவர் சிறிது காலம் பூமியில் இருக்க விருப்பம்கொண்டு, ஸ்ரீவைகுண்டத்திலிருந்து விளையாட்டு மலையினையும் தெய்வீக சபையினையும் விஷ்வக்சேனரைத் தலைவராகக் கொண்ட தேவர்களையும் கொண்டு வருமாறு வெண்கழுத்துடைய கருடனுக்கு ஆணையிட்டார். கருடனும் வைகுண்டத்திற்குக் கிளம்பினார். இதற்கிடையில் விஷ்ணு கோமதி ஆற்றுக்குத் தெற்கே அறுபது யோஜனை (அறுநூறு மைல்கள்) தொலைவிலும் கிழக்குக் கடலுக்கு மேற்கே ஐந்து யோஜனை (ஐம்பது மைல்) தொலைவிலுள்ள ஸ்வர்ணமுகி (சுவர்ணமுகி)யின் வடகரையிலும் அமைந்துள்ளதும் புண்ணிய மனிதர்கள் வசிப்பதும் ஆகிய புனிதமானதோர் இடத்தைத் தேர்ந்தெடுத்தார்.

கருடனும் (கிரீடாத்ரியை) விளையாட்டு மலையினை கொண்டு வந்தார். பொன்னும் மதிப்புவாய்ந்த மணிகளும் பொதிந்திருக்கும் உயரமான சிகரங்களையுடையதும் ஐந்து உபநிடதங்கள் (ஐந்து மெய்பொருளியல் நூல்கள்) உருவில் அமைந்ததும், நாராயண கிரி (நாராயணனான விஷ்ணுவின் மலை) என அழைக்கப்படுவதுமான விசாலமான இயற்கைக்குன்றான அதை அதில்-வசிப்பவர்களுடன் கூட அவர் எடுத்து வந்தார். பரப்பளவில் அது மூன்று யோஜனை (முப்பது மைல்கள்) அகலத்துடனும் முப்பது யோஜனை (முந்நூறு மைல்கள்) நீளத்துடனும் வடிவில் அது (ஆதிபாம்பாகிய) சேஷனை ஒத்தும் இருந்தது. ஹரியின் (விஷ்ணுவின்) படுக்கையான அது மாந்தர்கள் புகலடைவதற்கான தக்க இடமாகவும் அனைத்துப் பிராணிகளும் விரும்பும் இடமாகவும் அது விளங்கியது. உருவினில் சிறந்திருக்கும் அது அவ்வப்போது பக்தியுடன் வருகை புரிபவர்களுக்குக் கூடப் பெரும் புண்ணியத்தையும் வீடு பேற்றினையும் அளிக்கின்றது.

வராகர் தாம் தேர்ந்தெடுத்த இடத்தில் அதை வைக்குமாறு கருடனிடம் கூறினார்; அதன் மீது ஏறி தூய்மையும் தெய்வத் தன்மையும் கொண்ட விமானத்தினில் (கோயிலில்) நின்று கொண்டு காட்சியளித்தார். அக்கோயில் பல்வகை மதிப்புவாய்ந்த மணிகள் இழைத்த பல கோபுரங்களுடன் பொலிந்து விளங்கியது. இரத்தினங்கள் இழைத்த தூண்களுடன் கூடிய மகா மணி மண்டபத்தினால் அதன் எழில் மேலும் கூடியது; அதனை வெறும் சொற்களில் வடிக்க இயலாது. அதன் கிழக்கில் சுவாமி புஷ்கரிணி ஆகிய திருக்குளம் புனிதமான கானகத்தில் அமைந்துள்ளது. இப் புஷ்கரிணிக்குத் தெற்கே உயர் கடவுளான தாமரைக் கண்ணன் விஷ்ணு சங்கு, சக்கரம், கதை ஆகியவற்றைத் தாங்கி வலது மார்பினில் திருமகளை இருத்திக் கொண்டு தெய்வீக விமானத்தின் கீழ் நின்று அருள் புரியத் திருவுள்ளம் கொண்டார்.

பிரமன், தேவர்கள், முனிவர்கள், ஏழு ரிஷிகள் ஆகியோரும் மற்றும் பலரும் அவரை (வராகரை)ப் பின்வருமாறு வேண்டிக் கொண்டனர்: "எம்பெருமானே! உமது கொம்புப் பற்களுடனும் நெரித்த புருவங்களுடனும் உமது உடலின் இரு புறங்களிலிருந்தும் தொங்கிக் கொண்டிருந்தும் பளபளப்பான ஆயுதங்களுடனும் உம்மைப் பார்ப்பதற்கே பயங்கரமாய் இருக்கின்றது. தேவர்கள் திருப்தி யடையும் பொருட்டு சாந்தமானதொரு தோற்றத்துடன் இம் மலையின் மீதே மனிதர்களைக் காப்பாற்றுவதற்காக இருந்து வர வேண்டும். மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் ஓர் இருப்பிடம் வேண்டும் என்பதற்காக நீர் பூமியை மட்டுக்கொடுத்திருக்கிறீர். எனவே, மனிதர்களின் பாதுகாப்பிற்காக அமைதியான முகத்தினை ஏற்று, தியான யோகத்தினாலும் கர்ம யோகத்தினாலும் உம்மை அடைய

முடியாத மக்கள் அனைவருக்கும் வரங்கள் அளித்துக் கொண்டு இங்கேயே வசித்து வரவேண்டும்."

உடனே வராக சுவாமி அமைதியான வடிவம் ஏற்று, அணிகலன்கள் அணிந்து, நான்கு கைகளுடனும் வெண்மை முகத்துடனும் ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோருடன் காட்சியளித்தார். பணிவுடன் தம்முன் இருக்கும் தேவர்களை நோக்கி, "வைகுண்டத்தை விட இந்த வேங்கட மலையே எனக்கு உகப்பாயுள்ளது. ஸ்ரீதேவி, பூதேவி இருவருடனும் மாந்தர்களின் வேண்டுகோள்களை நிறைவேற்றிக் கொண்டும் இங்கேயே இருக்கின்றேன்" என்று கூறி, அவர்களைத் தத்தம் இருப்பிடங்களுக்குச் செல்லுமாறு பணித்து, உடனே மறைந்து போனார்.

"வைகுண்டாத்பரமோ ஹ்யேஷா
வேன்கடாக்யோ ந கோத்தமஹ,
அத்ரைவ நிவஸாம்யேவ
ஸ்ரீ பூமி ஸஹிதோஹ்யஹம் (சு.12)
ததாமி ப்ரார்த்திதான் அர்த்தான்
மநுஜேப்யஹ் ஸதா ஸுரான்
(சு.13)

(வராக புராணம், பகுதி 1,
அத்தியாயம் 35,
சுலோகங்கள் 12, 13)

(தொடரும்)

## சத்திய சோதனை

பீஷ்மர் தனது தந்தையின் ஆசையை நிறைவேற்றுவதற்காக 'திருமணம் செய்து கொள்வதில்லை என்றும், 'மனத்தாலும் மாதரைத் தீண்டேன்' என்றும் சபதம் புரிந்தார். பின்னர் ஒரு சமயம் அவருடைய சிறிய தாயார் சத்தியவதி பீஷ்மரை நோக்கி தம்முடைய சந்திரகுலம் வாரிசு இல்லாமல் போய்விடுகிறது என்றும் குலம் பெருக . ஒரு கன்னியை மணந்துகொள் எனவும் சொன்னாள். அதற்கு பீஷ்மர் தாம் மூவுலகங்களையும் இன்னும் இவற்றிற்கு மேலான எதையும் தான் இழந்து விடுவதாகவும், சத்தியத்தை மட்டும் மீற மாட்டேன் என்றார். தன் இயற்கை குணமாகிய கந்தத்தை மண்ணும், தன்மை குணத்தை நீரும், வெம்மை ஒளி முதலிய குணங்களை தீயும், பரிச குணத்தை வாயும், தன் காந்தியை சூரியனும், தன் குளிர்ச்சியை சந்திரனும், தன் சப்த குணத்தை ஆகாயமும், தரும குணத்தை அறக்கடவுளும் இழந்து விடினும் விடலாம்; தான் மட்டும் சத்தியத்தை கைவிடமாட்டேன் என பீஷ்மர் மன உறுதியுடன் பதிலளித்தார்.

"கோடானு கோடி கொடுப்பினுந் தம்முடை நாக்

கோடாமை கோடி பெறும்"

என மூதாட்டி ஔவைப் பிராட்டியார் கூறியுள்ளது இதற்குச் சாலப்பொருந்தும்.

இன்னொரு சமயத்தில் காசிராஜன் மகளாகிய அம்பாவை மணந்து கொள்ளும்படி பீஷ்மரின் குரு பரசுராமர் பீஷ்மரைக் கேட்க, அதற்கு தனது தந்தையின் பொருட்டு மாதரை மணம் புரிவதில்லை என முன்பே விரதம் கொண்டுள்ளதாக பீஷ்மர் தனது குருநாதரிடம் கூறினார்.

"இன் சொலால்வனி கொண்ட வெந்தை முதலின் படன்ற வினி தெய்தநான்
வன் சொலால் விரத மணமுறே னென மனத்தினால் விரத மன்னினேன்"

மேலும், குருவைத் தவிர தமக்கு சிறந்த தெய்வமில்லை. 'மணம் புரிவதில்லை' என்ற சொல்லை ஒருபொழுதும் வழுவேன். தமது உயிரை வேண்டுமானாலும் தருவேன்.

"வளம் புனைந்த அனுராக போக மிகு மாதர் மங்கையர் பொருட்டினால்
விளம்புமிந்த மொழி யொழிக வென்றனுயிர் வேண்டுமென்னிலும் வழங்குவேன்"

என்ற உறுதிமொழிகள் மறக்க இயலாது. உயிருக்கு ஆபத்து வந்தாலும் சத்தியத்திற்கு சோதனை மலையாக வந்தாலும், அதனை கைவிடப்படுவதில்லை என்பதை பீஷ்மர் தனது பண்புகளால் நிருபித்துவிட்டார்.

திருமதி. இரா. தெய்வவீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.

# காரியஸித்தி அளிக்கும் புரட்டாசி சனிக்கிழமை விரதம்

திரு. சக்தி. விண்மணி - போடிநாயக்கனூர்.

ஒவ்வொரு மாதமும் சனிக்கிழமைகள் வரத்தான் செய்கின்றன. ஆனால் புரட்டாசி மாதம் வரும் சனிக்கிழமைகளுக்கு தனிச்சிறப்பு உண்டு.

புரட்டாசி சனிக்கிழமைகளில் விரதமிருந்து கலியுக வரதனான திருவேங்கடப்பெருமான் ஸ்ரீனிவாசனை வழிபட்டால் சகல நலன்களும் உண்டாகும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. பிரம்மவைவர்த்த புராணம் வெங்கடாஜலபதியின் பெருமையை எடுத்தியம்புகின்றது.

ஸ்ரீமந் நாராயணனைப் பூஜிக்க எல்லா நாளும் ஏற்றதே என்றாலும், அந்த நாராயணனே தேர்ந்தெடுத்துச் சொன்ன நாள் புரட்டாசி சனிக்கிழமை. இந்நாளில் வெங்கடாஜலபதி உபாஸனை செய்வது காரியஸித்தி அளிக்கும்.

புரட்டாசி சனிக்கிழமைகளில் வெங்கடாஜலபதியை திருமலையில் முறைப்படி வழிபாடு செய்து அருள்பெற்றவர் நாரத மகரிஷி! தான் பெற்ற பலனை ஒரு ஏழைக்குயவனும் அடைய வழிகாட்டினார்.

திருமலை அடிவாரத்தில் ஒரு ஏழைக்குயவன் வாழ்ந்து வந்தான். பீமய்யா என்ற அழகிய பெயரையுடைய அவன் உடல் ஊனமுற்றவன். கால் இல்லை! ஆனால் உள்ளம் ஊனமில்லை. தெய்வ பக்தியில் மூழ்கித் திளைத்தவனாக இருந்தான். மண் பாண்டங்களை விற்று அதன்மூலம் எளிய முறையில் வாழ்க்கையை நடத்தினான். எந்த நேரமும் இறை நாமத்தையே உச்சரித்தவாறு இருந்தான்.

ஒருநாள் அவனது கனவில் நாரத மகரிஷி தோன்றினார். புரட்டாசி சனிக்கிழமை விரதமிருந்து வெங்கடாஜலபதியை



வழிபடும் முறைகளை உபதேசித்தார். மலைமது ஏற முடியாது வருந்திய அவன் தனது குடிசையிலேயே வழிபாடு நடத்த முடிவு செய்தான்.

மண்ணால் வெங்கடாஜலபதியின் உருவத்தைச் செய்தான். மண்ணாலே மலர்கள் செய்து புரட்டாசி சனிக்கிழமைகளில் அர்ச்சித்து வழிபாடு செய்தான். தன் வசதிக்கேற்ப நாரத மகரிஷி கூறிய முறைப்படி விரதத்தைக் கடைபிடித்தான்.

அதே காலத்தில் திருமலையில் பெருமானுக்கு ஆலயம் கட்டிய, மன்னன் தொண்டைமானும் திருமாலுக்கு அர்ச்சனை செய்தான். மன்னன் அல்லவா? பொன்னால் ஆன மலர்களால் அர்ச்சித்து மந்திரங்களை ஒலித்தான்.

ஒருநாள் மன்னன் பொன்மலர்களால் அர்ச்சனை செய்து கொண்டிருந்தபோது அவற்றின் ஊடே மண்மலர்களும் விழுவதைப் பார்த்தான். அதிர்ச்சியுற்றான். மனம் கலங்கினான். வழிபாட்டில் குறையுள்ளதோ என வருந்தினான். கண்ணீர் சிந்தினான். மண்மலர்கள் பீமய்யாவுடையது என்பதை பகவான் மன்னனுக்கு உணர்த்தினார்.

ஏழையும் முடவனுமாகிய பீமய்யாவின் புனிதமான வழிபாடு பற்றி அறிந்த மன்னன், பீமய்யாவின் குடிசைக்குச் சென்றான். பகவான் அடியாராகிய பீமய்யாவைத் தரிசித்தான். புரட்டாசி சனிக்கிழமை விரதமிருந்ததால் ஏழைக் குயவன் மோட்ச உலகை அடைந்தான்.

### சனிவார விரதம்

வைகறையில் எழுந்து காலைக்கடன்களை முடித்து நீராட வேண்டும். தூய ஆடை அணிதல் வேண்டும். நெற்றியில் சந்தனம் குங்குமம் அல்லது திருமண் இட்டுக் கொள்ள வேண்டும். பூஜை அறையில் வெங்கடாஜலபதி திருவுருவப் படம் அல்லது சிறிய திருவுருவச்சிலையை வைத்து, முன்னே அமர வேண்டும். விளக்கை ஏற்றி, படத்திலும் விளக்கிலும் அலமேலுமங்கையுடன் கூடிய வெங்கடாஜலபதியை ஆவாஹனம் செய்யவேண்டும்.

துளசியால் அர்ச்சனை செய்ய வேண்டும். ஊதுபத்தி காட்டுதல் வேண்டும். பால், பழம், பாயஸம், கற்கண்டு, பொங்கல் படைக்க வேண்டும். கற்பூர ஆராதனை செய்தல் வேண்டும். அன்று முழுவதும் பால் பழம் மட்டுமே உண்டு, வெங்கடாஜலபதியின் மகிமை பற்றிய நூல்களைப் படித்து 'ஓம் நமோ நாராயணாய' மந்திர ஜெபம் செய்ய வேண்டும். இதே போல் மாலையிலும் வழிபாடு செய்யலாம். இதுவே சனிவார விரதம் எனப்படும். திருவுருவப் பட அலங்காரம், நைவேத்தியம் போன்றவைகளை வசதிக்கேற்ப செய்து கொள்ளலாம்.



## மாசி-பங்குனியில் ஆழ்வார்-ஆசார்யர்கள் அவதார நன்னாட்கள்

| | | | |
|---|---|---|---|
| *1) | திருக்கச்சி நம்பிகள் | மிருகசீர்ஷம் | 24-2-99 |
| 2) | சுந்தரத்தோளுடையான் (திருமாலையாண்டான் குமாரர்) | மிருகசீர்ஷம் | 24-2-99 |
| *3) | குலசேகராழ்வார் | புநர்வசு | 26-2-99 |
| 4) | கந்தாடையாண்டான் (முதலியாண்டான் குமாரர்) | புநர்வசு | 26-2-99 |
| 5) | பிள்ளை உறங்காவில்லி தாசர் | ஆயில்யம் | 28-2-99 |
| 6) | மணக்கால் நம்பி | மகம் | 1-3-99 |
| 7) | திருமாலையாண்டான் | மகம் | 1-3-99 |
| *8) | நஞ்சீயர் | உத்தரம் | 31-3-99 |
| 9) | திருவரங்கத்தமுதனார் | அஸ்தம் | 1-4-99 |

* தி.தி. தேவஸ்தானத்தாரால் கொண்டாடப்படும் நட்சத்திரங்கள்.

## மூன்று

| | | |
|---|---|---|
| மூவராவோர் தம்பிரான்கள் | - | பிரம்மன், விஷ்ணு, ருத்திரன் |
| முத்தொழில் | - | ஆக்கல், காத்தல், அழித்தல் |
| முக்குணம் | - | இராஜசம், சத்துவம், தாமசம் |
| முத்தேவர் | - | இந்திரன், வாயு, அக்கினி |
| முச்சுடர் | - | ஞாயிறு, திங்கள், அக்கினி |
| மூன்று அவஸ்தை | - | சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி |
| மூன்று பேரரசு | - | சேரன், சோழன், பாண்டியன் |

இரா. தெய்வ வீர லெக்ஷ்மி - தூத்துக்குடி.

# நாம் பண்டிகைகள் கொண்டாடுவது ஏன்?

திருமதி. பிரேமாராவ் - பெங்களூர்.

ஸ்ருஷ்டியில் பூமிக்கு அருகே மூன்று பாகம் நீரும், ஒரு பக்கம் பூமியின் நிலம் உள்ளது. இதில் தான் மனிதர்கள், விலங்குகள், பறவைகள், தாவரங்கள் நிறைந்துள்ளன. மனிதன் மட்டும் ஆதிகாலமுதலே சுகம், துக்கம், லாப நஷ்டம், சோகம், சந்தோஷம், ஜனனம், மரணம் அனைத்தும் அநுபவித்து வந்துள்ளான். நாற்புறத்தில் மூன்று பாகம் நீர் ஆனால் ஒரு பாகம் நிலத்தில் மட்டுமே மனிதனின் ஜீவிதம் துவக்கமானது. ஸ்ரீராமரின் வாழ்க்கையில் கூட மகிழ்ச்சி ஒரு பாகம், துக்கம் மூன்றுபாகமாக உள்ளதை உதாரணமாக கூறலாம்.

பாரத தேசத்து மக்களுடைய வாழ்க்கையிலும் யார் ஒரு தனி மனிதனும் நான் எவ்வித குறையும் இல்லாதிருக்கிறேன் எனக் கூறியதில்லை. எல்லோருமே தன் நித்திய ஜவனத்துக்காக காலையில் உத்தியோக்த்துக்கு போவதும், மாலையில் வீட்டையடைவதுமாக கடமையில் மூழ்கியுள்ளனர். போவதும் வருவதும், உண்பதும் உறங்குவதும் என ஒரே விதமான வாழ்க்கையில் மூழ்கி நாளடைவில் அலுத்து போகிறார்கள். இந்த அலுப்பு, சலிப்பு இரண்டிலும் பாதித்து கோபம், வெறுப்பு, சண்டை, ஏதோ சிந்தனை, இவற்றால் ஆரோக்யமே சீர்கேடாகி துன்புறுகின்றனர். இதை எல்லாம் கண்டு மனம் நொந்த மஹரிஷிகள் மனிதனின் மனோநிலை சீருடன் இருந்து நல்வாழ்க்கை வாழ வேண்டும் அதுவும் பிறருக்கு பயனுண்டாகும் வண்ணம் ஆனந்தமாக வசிக்க வேண்டும் என பர்வகாலங்களை பண்டிகைகளாக கொண்டாட வழிவகுத்தனர்.

கோ சாலையில் உள்ள பசு, எருது போன்ற விலங்குகள் வெய்யிலிலும் மழையிலும் உழைத்தும் மேய்த்தும் கட்டி வைத்திருக்கிறார்கள். அவற்றை திறந்த வெளியில் கட்டாமல் விட்டால் ஓடியாடி துள்ளிக் குதித்து மனம் போல் புல் மேய்ந்து திரியும் ஏதோ புதிய வாழ்க்கை கிடைத்தது போல அது தன் கன்றுடன் மகிழ்ச்சியாக ஓடுவதைக் காணலாம்.

அதேபோல மனிதர்களுக்கும் தினசரி வாழ்வில் ஒரு சிறு மாறுதல் ஏற்பட்டாலும் அதை வரவேற்கிறான். அதையே மஹரிஷிகள் ஒவ்வொரு மாதமும் சுக்ல பக்ஷம், கிருஷ்ணபக்ஷம் க்ருஹ நட்சத்திரம் , ராசி முதலியவற்றை கணக்கிட்டு பர்வ பண்டிகைகளை பரம்பரையாக கொண்டாட வழி உண்டாக்கி வைத்தனர்.

உலகத்தில் அநேகமாக இந்துக்களுக்கு மட்டுமே விரதம், பண்டிகை, பூஜை முதலியன இந்த இரண்டு படசங்களை அநுசரித்து ஏற்பட்டுள்ளன. ஒருவரின் பிறப்பு வந்தால் அவனது இறப்பு வருவதும் நிச்சயம் நாம் அனைவரும் அறிந்ததே. அப்படி இருக்கும் போது நாம் ஜீவிக்கும் வாழ்க்கையை நாம் ஏன் கூடியவரை நமக்காகவும், அடுத்துவருக்காகவும், ஆனந்தமாக கழிக்கக் கூடாது? நாம் கொண்டாடும் ஒவ்வொரு பண்டிகையும் அந்தந்த ருதுவுக்கு ஏற்றாற் போலவும் சிதோஷ்ண நிலைக்கு பொருந்தும் வண்ணமும் உள்ளதை அறிவோம். பண்டிகைக் காலம் வரும்போது ஒவ்வொருவரும் தம் தம் குலத்தொழிலை சிரத்தையுடன் செய்வதில் மும்முரமாக ஈடுபடுகிறார்கள். ஊக்கத்துடன் உழைக்கிறார்கள். இந்த கடின உழைப்பின் பலனை பூரணமாக அந்த பண்டிகை நாளில் ஆனந்தமாக அநுபவித்து வலி மறக்கிறார்கள். புத்தாடை அணிந்து மற்றவர்களுக்கு இனிப்பு வழங்கி, பெரியோரை வணங்கி கோவில்களுக்கு சென்று தம் குடும்பத்தாருடன் கூடியிருந்து பண்டிகை கொண்டாடும் போது அந்த மகிழ்ச்சிக்கு எல்லை உண்டா? உள்ளுக்குள் மனபேதத்தை மறைத்து கோபத்தை வெளிக்காட்டி கொள்ளாமல் பகைவனையும் அணைத்துக் கொள்வது பண்டிகை நாள் மட்டும் தானே? வருடத்துக்கொரு நாள் சண்டை ஏன் என்பார்கள்.

எவ்வளவோ பண்டிகைகள், பர்வங்கள் இருந்தாலும் மஹரிஷிகள் அதிமுக்யமாக சிலவற்றை நியமித்தனர். அவை யாவன. புத்தாண்டு பிறப்பு, ராமநவமி, ஆவணி அவிட்டம், கிருஷ்ணஷ்டமி, விஜய

தசமி, தீபாவளி, பொங்கல், ஹோலி, சிவராத்திரி, குருபூர்ணிமா என மிகப் பெரிய பண்டிகைகளாகப் பிரித்தனர். இதிலும் அமாவாசை, பௌர்ணமி, வெள்ளிக்கிழமை, இஷ்ட தேவதை பூஜை என அந்தந்த குடும்பத்தினரே பிரத்யேகமாக கொண்டாடி வருவதை காண்கிறோம்.

வைஷ்ணவர்கள் ஏகாதசியன்று பட்டினியாக இருந்து இறைவழிபாடு மட்டுமே செய்வார்கள். மறுநாள் பண்டிகை போல கொண்டாடுவதுண்டு. கிருஷ்ணபரமாத்மா அர்ஜுனனுக்கு கீதோபதேசம் செய்த சுக்ல ஏகாதசி தினத்தை கீதா ஜெயந்தி என கொண்டாடுகிறார்கள். கீதை உண்டான நாள் என்பதால் மூன்று நாட்கள் தொடர்ந்து கீதை பாராயணம், பூஜை முதலியன நடத்துவது வழக்கம்.

இவ்விதமாக நம் பாரத தேசத்தில் பண்டிகைகள் கொண்டாடுவது வழக்கமாயிற்று. பண்டிகை கொண்டாடுவதால் உறவு பலப்படுகிறது. பாசப்பிணைப்பும், நட்பும், பெருகும். நம் கலாசாரம் மாறுமல் காக்கவும் பண்டிகைகள், பெரிதும் உதவுகின்றன. ஆடம்பரமாக இல்லாவிடினும் அவரவர் சக்திக்கேற்ப அந்தரங்கமான ஆழ்ந்த அன்பை வெளிப்படுத்தி அவரவர் பரம்பரை பாரம்பரியத்தை விட்டுக்கொடுக்காமல் பண்டிகைகள் கொண்டாடி மகிழ்ச்சியுடன் தானும் வாழ்ந்து தன்னை அண்டியவர்களையும் வாழவைக்க வேண்டியது நம் ஒவ்வொருவருக்கும் முக்கியமாகும்.

பண்டிகை தினங்களில் பிரத்யேகமான விசேஷ சமையல் வகைகள் செய்தாலும் அது கூட அந்த பருவநிலைக்கு ஒத்ததாக தான் உள்ளன. அந்த பருவத்தில் கிடைக்கும் பழம், காய்கள் முதலியவை சம்பந்தப்பட்டதாக தான் இருக்கின்றன. புத்தாண்டு தினம் என்றால் வேம்பு பச்சடி, ஆடி மாத பண்டிகைகளில் தேங்காய், வெல்லம், நவராத்திரியில் பல வித சுண்டல்கள், இவ்விதம் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு மாற்றம் வைத்துதான் நம் முன்னோர்கள் மஹரிஷிகள் பண்டிகைகளை கணித்துள்ளனர்.

பண்டிகை என்றாலே செலவு தான். சாப்பாடு தான் என நகையாடாமல் இதனை காரண, காரியமாகத்தான் நாம் செய்கிறோம் என முழு நம்பிக்கை வைத்து கொண்டாடினால் உலகம் சுபிட்சமாக இருக்கும் என்பது உறுதி.



## ஆயுதங்கள்

பகவான் திருமாலின் ஆயுதங்களின் சிறப்பு:- ஸ்ரீமந் நாராயணனின் ஆயுதங்கள் ஐந்து, பஞ்சாயுதங்கள் அவைகள் சக்ரம், சங்கு, கதை, வாள், வில் இவற்றிற்கும் சில தத்துவ விளக்கம் உண்டு.

சக்ரம் - மனஸ் தத்துவம்
கதை - புத்தி தத்துவம்
சங்கு - அகங்கார தத்துவம்
வாள் - வித்யா தத்துவம்
வில் - இந்திரிய தத்துவம்

ஸ்ரீசுதர்சன மூர்த்திக்கும் சில சிறப்பு சன்னதி உள்ள ஸ்தலங்கள்:

1) அழகர் கோவில் (மதுரை)
2) திருமோகூர் (மதுரை)
3) கூடல் அழகர் பெருமாள் (மதுரை)
4) கும்பகோணம்.
5) காஞ்சிபுரம்.
6) திருக்கோஷ்டியூர்.

சுதர்ஸன மூர்த்தியை வணங்கினால்ஆயுள், வேலை வாய்ப்பு கிடைக்கும். திருமணத்தடை, பில்லிசூனியம், மன அமைதியின்மை எல்லாம் விலகும்.

பார்சன் செ. ரமேஸ் - மதுரை.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பதினெட்டாம் அத்தியாயம்

## மோக்ஷ ஸந்யாஸ யோகம்

உமைப்ரியன்

**ந ஹி தேஹப்ருதா சக்யம்**
**த்யக்தும் கர்மாண்ய சேஷத: ।**
**யஸ்து கர்மபலத்யாகீ ஸ**
**த்யாகீத்யபிதீயதே ॥ (11)**

"இப்பூமியில் பிறப்பெடுத்தவர்கள் வினைகள் ஆற்ருமல் இருக்க முடியாது. ஆனால் அதே சமயத்து அவ்வினைகளை மேற்கொள்ளும்போது அவ்வினைப் பலன்களை யார் ஒருவன் துறந்து விடுவாரோ அவனே சிறந்த தியாகியாகப் போற்றப்படுகிருன்."

[வினையாற்ருமல் யாரும் சும்மா இருக்கமுடியாது. தன் அன்ருட தேவைகளுக்காவது அவன் நாளும் வினைகளை கர்மங்களை மேற்கொள்ள வேண்டும். இது சாதாரண மனிதனின் நிலை. ஆனால் ஆன்மீகச் சிந்தனை கைவரப்பெற்ற இந்த மனிதன் செய்வதுதான் அல்ல, செய்யும் வினை தனக்காக அல்ல. அந்த வினை களால் ஏற்படும் பலன்கள் எனக்கல்ல' என்று எண்ணி, எப்போது அவன் வினைப்பயன் களுக்கு உரிமை கேட்காது இருக்கிருனோ, அப்போதே அவன் சிறந்த துறவி அல்லது தியாகி ஆகின்ருன்.]

**அனிஷ்டமிஷ்டம் மிச்ரம் ச**
**த்ரிவிதம் கர்மண: பலம் ।**
**பவத்யத்யாகினாம் ப்ரேத்ய ந து**
**ஸந்யாஸினாம் க்வசித் ॥ (12)**

"துறவுநிலை அடையாதவர்களுக்குத் தீமை பயக்கும் வினைப் பயன்கள், நன்மை பயக்கும் வினைப்பயன்கள், நன்மையும் தீமையும் கலந்து வினைப்பயன்கள் என்று மூன்றுவகை வினைப்பயன்கள் அவர்களது மரணத்திற்குப் பிறகு உண்டாகின்றன. ஆனால் தியாகிகள் எனும் துறவிகளுக்கு மேற்படி வினைப்பயன்கள் எக்காலத்தும் இல்லை."

[நன்மை தரும் வினைப்பயன் என்பது அதனால் ஒருவன் சுவர்க்கம் செல்லும் வாய்ப்பினையும், தேவர்களாகப் பிறந்திடும் நிலையினையும் அடைவதாகும். அதேபோன்று தீமை தரும் வினைப்பயன்களினால் ஒருவன் நரகத்தில் வீழ்வதும், மிருகங்களாகப் பிறப்பதும் ஆகும். நன்மையும் தீமையும் கலந்த வினைப்பயன்களினால் உயிரானது இந்த மண்ணுலகில் மனிதனாகப் பிறத்தலாகும். இந்த மூன்று நிலையினையும் வினைப்பயன்களின் மீது



பற்று கொண்டவர்கள் அனுப விப்பதாகும். ஆனால் வினைப் பயன்களின்மீது ஆசையோ, பற்றோ கொள்ளாத துறவிகள் எனப்படுவோர்க்கு இந்தப்பலன் கள் யாதும் இல்லை. அவர் கள் தங்கள் உடலை ஒரு நிழலாகவே கொள்வர். நீரிலி ருந்து எண்ணெய் தனித்திருப் பது போன்று தாங்கள் செய் யும் வினைப்பயன்களிலிருந்து தனித்து இருந்து செயல்படு வர். அந்த நிலையில் அவர் களுக்கு முக்தி எனும் பிற விப்பயன் தானாகவே வந்த மைகிறது. மனிதன் தன்னு டைய தீய, நல்ல வினைப்ப யன்களால் இம்மண்ணில் பிறவி எடுத்துள்ளான். சிந்திக்கத் தெரிந்த மனிதன், தான் மேற் கொள்ளும் வினைகளின் பாதிப் பினை நன்றாகவே அறி வான். தன்னை மேம்படுத்திக் கொள்வதும், தன்னைத் தாழ்த் திக் கொள்வதும் அவனுடைய வினை களைப் பொறுத்தே அமைகின்றது. மேலும் சிந்திக் கத் தெரிந்த மனிதன், வினைப் பயன்களின் மீது கொள்ளும் பற்று தன்னை மேன்மேலும் வினைகளை மேற்கொள்ளவே செய்கின்றது என்பதையும் அத னால் தான் மீளாப் பிறவிப்பெ ருங்கடலில் மீண்டும் மீண்டும் தள்ளப்படவே செய்வோம் என் பதையும் அறிகின்றான்.]

பஞ்சைதானி மஹாபாஹோ
காரணானி நிபோத மே |
ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி
ஸித்தயே ஸர்வகர்மணாம் || (13)

"பரந்த தோள்களையுடைய வனே! எல்லா வினைகளை யும் செய்து முடிப்பதெற் கென்று, கரும காண்டத்தின் முடிவை காட்டும்படியான சாங் கிய சாஸ்த்திரத்தில் கூறப்பட் டுள்ள (இந்த) ஐந்து கார ணங்களையும் என்னிடமிருந்து அறிந்து கொள்வாயாக."

[நாம் நாளும் வினைகளை மேற்கொள்வதெல்லாம், நாம் நம் வாழ்க்கையில் நம் கட மைகளை சரிவரச் செய்து, இறுதியில் மோட்சம் எனும் வீடுபேற்றை அடைவதற்கே யாம். வினைகளை மேற்கொள் ளும் போது நமது மனம், உடல் தூய்மையாக்கப்படுகின் றன. இந்த இயற்கையானது. நமக்கு ஒரு பள்ளிக்கூடம் போன் றது. இப்பள்ளியில் படித்திடும் போது அவன் அறிவைப் பெறு கின்றான். சிந்தனை சீரியதாக் கப்படுகிறது. பிறகு படிப்பு முடிந்த பின் அவன் அந்த பள்ளியை விட்டுச் செல்லு தலே வேண்டும் என்பதே அவன் குறிக்கோள். வகுப்பில் தேர்ச்சி பெறாவிட்டால் அவன் அப்பள் ளியிலேயே இருந்திடல் வேண் டும். ஆம் மனிதன் வினைகளை மேற்கொள்ளும்போது தன்னை மேன்மையாக்கிக் கொள்ளா விட்டால், ஆசை, காமம் இவற் றின் துன்பத்தை அறியாவிட் டால், அவன் பிறவி எனும் பள்ளியை விட்டு வெளியே வர முடியாது. ஆகவே மனிதன் வினைகளுக்குரிய பயன்களை - அதன் இயல்புகளை அறிந்து கொள்ளுதல் வேண்டும்.]

அதிஷ்டானம் ததா கர்த்தா
கரணம் ச ப்ருதக்விதம் |
விவிதாஸ்ச ப்ருதக்சேஷ்டா தைவம்
சைவாத்ர பஞ்சமம் || (14)

"உயிரின் இருப்பிடமாக விளங் கிடும் உடல், வினைகளை மேற் கொள்ளும் மனிதன் (கர்த்தா), வெவ்வேறு விதமான இந்திரி யங்கள், பலவகையான மாறு பட்ட செயல்கள், மற்றும் தெய் வச் செயலும் சேர்ந்தனவே ஐந்து காரணங்களாகும்."

[அதிஷ்டானம் என்றால் இருப் பிடம் என்று பொருள். விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், ஞானம் என்பவைகளை அனு பவிக்கும் இடமாக - இருப் பிடமாக இந்த உடல் உள் ளது. அதாவது ஆசை களின், உணர்ச்சிகளின் ஊற் றாக இந்த உடல் உள்ளது. இந்த உணர்வுகளை அனு பவிக்கும் ஜீவாத்மாவே இந்த இருப்பிடத்திற்கு, இந்த உட லுக்கு உரிமையாளன் அதாவது கர்த்தா என்று அழைக்கப்படுகி றான். கண், காது, மூக்கு போன்ற ஐந்துப் புறக்கரணங் கள், மனம், புத்தி போன்ற அந் தக் கரணங்கள், வாய், கால், கை போன்ற செயற்கருவி கள் ஆக பதினான்கு செயல் புரியும் கருவிகள், நாம் உயிர் வாழ, சக்தி பெற்றிட உடல் இயங்கிட நமக்கு உத விடும் பிராணன், அபானன் போன்ற பத்துவகை வாயுக்கள், மனித முயற்சிகளை, செயல் களை, பலன்களை தோற்று வித்து அனைத்தையும் கட்டுப் படுத்திடும் தெய்வம் ஆகியன ஐந்து காரணங்களே நம் வினை களுக்குத் துணையாக நின்று செயல் புரிகின்றன.]

சரீர வாங்மனோபிர்யத்கர்ம
ப்ராரபதே நர: |
ந்யாய்யம் வா விபரீதம் வா
பஞ்சைதே தஸ்ய ஹேதவ: || (15)

"மெய்யாலும், மொழியாலும், மனதாலும் எவனொருவன் நேர் மையான வழியிலோ, அல்லது தீய வழியிலோ வினைகள் மேற் கொண்டாலும் அவையாவற் றிற்கும் மேற்கூறிய ஐந்து கார

ணங்களே துணையாக செயல் புரிகின்றன."

[உடலில் கண், மூக்கு, காது என்று பல பகுதிகள் இருந்தாலும் "மனம்" ஈடுபாடு இல்லையென்றால் அவற்றிற்குப் பயன் இல்லை. சாக்கடை பக்கத்தில் வழிந்தோடினாலும் ஒருவன் முகம் சுளிக்காமல் மூக்கை மூடிக்கொள்ளாமல் இருந்தானேயானால் அவன் மனம் வேறு எங்கேயோ லயித்துக் கொண்டிருக்கிறது என்று பொருள். அவன் சிந்தனை வேறெதின் மீதோ படர்ந்து உள்ளது என்று பொருள். ஆகவே மனம் ஒத்துழைத்தால் அன்றி, அவனால் செயல்புரிய முடியாது. அந்த மனதின் கட்டளையினால்தான் அவன் உடல் அசைகின்றது. வாய் பேசுகின்றது. கை, கால், காது, மூக்கு அவற்றிற்கு துணை புரிகின்றன. மருத்துவர் கையில் இருக்கும் கத்தி நோயாளியின் கட்டியை அப்புறப்படுத்தப் பயன்படுகிறது. கொலையாளியின் கத்தி மற்றொரு உயிரைப் பறிக்கிறது. அந்தக் கத்தியைப் போன்றே நமது மனத்தினை நல்லவற்றிற்கும், தீயவற்றிற்கும் செலுத்தி வினை புரிகின்றோம். இந்த வினைகளை மனதின் ஆணையால் நாம் உடலாலும், பேசிடும் வாக்கினாலும் மேற்கொள்கின்றோம் இத்தகு செயல்களுக்கு மேற்கூறிய ஐந்து செயற்கருவிகளே துணை புரிகின்றன.]

தத்ரைவம் ஸதி கர்தாரமாத்மானம்
கேவலம் து ய: ।
பச்யத்யக்ருத புத்தித்வான்ன
ஸ பச்யதி துர்மதி: ॥ (16)

"அது அவ்வாறு இருக்க (மேற்கூறியவற்றிற்கு ஐந்து காரணங்களே துணையாக இருக்க) முழுமுதற் பொருளாகிய ஆத்மாவையே கர்த்தாவாக - செய்பவனாக - யார் ஒருவன் எண்ணுகிறானோ, அவன் அறிவு தெளிவற்றவன். அவனால் மெய்யறிவை அறியமுடியாது."

[ஒரு இரயில் வண்டி அல்லது விமானம் உருவாகி ஒடுவதற்கு தேவையான பொருட்கள் - எரிபொருள், காற்று, இரும்பு, ரப்பர் யாவுமே மண்ணிலிருந்து தான் கிடைக்கின்றன. ஆனால் அவற்றின் துணையால் உருவாகிய வண்டி, அந்த மண்ணின் துணையின்றியே அது இயங்குகிறது - செயல்படுகின்றது. ஆகவே பூமி அவ்வண்டிக்கு கர்த்தா என்று கூற முடியாது. எது வினைகளை செய்கின்றதோ அது கர்த்தாவாகும். மேலே முன்செய்யுளில் சொன்ன ஐந்து காரணங்களில் ஒன்றான தெய்வம் என்று கூறப்படும் ஜீவாத்மாவும் இயற்கையின் ஒரு கூறுபாடே. அது ஜடமான அசையாத இயற்கை. ஆனால் ஆத்மாவின் சிறப்பு நிலையில் அது வினைபுரிகின்றது. ஆகவே தான் புரியும் எந்த வினைகளுக்கும் தானே காரணமானவன் என்ற அகங்கார மனப்பான்மையுடன் இருப்பவன் உண்மையறியாத அறிவற்றவனாவான். உள்ளதை- உண்மையை அறியாதவன்.]

யஸ்ய நாஹம்க்ருதோ பாவோ
புத்திர்யஸ்ய ந லிப்யதே ।
ஹத்வாபி ஸ இமான் லோகான்ந
ஹந்தி ந நிபத்யதே ॥ (17)

"யாருக்கு தான் கர்த்தா என்ற அகங்கார உணர்வு இல்லையோ, யாருக்கு உலக ஆசைகளின் மீது பற்று இல்லையோ, அவன் இந்த உலகத்தில் யாரைக் கொன்றாலும் கொல்லாதவனாவான். அதனால் அவன் அவ்வினை மேற்கொள்ளலில் சம்பந்தபடாதவனாவான்."

['நான்' செய்தேன் என்ற அகங்கார உணர்ச்சி இல்லாமல் அதனைக் கடந்து இருப்பவன் எவனோ, ஆத்மா என்பது உள்ளத்தைக் கடந்து விளங்குவது என்று அறிபவன் எவனோ, யார் ஒருவன் ஆசையின் பின்னணியில் அறிவை பயன்படுத்துவதில்லையோ, வினைப் பயன்களின் ஆசையால் ஈர்க்கப்படவில்லையோ அவன் தங்களுடைய வினைகளுக்கும், பலன் களுக்கும் பொறுப்பாகமாட்டான். மேலும் விளைவுகளின் தாக்கத்தாலும், அவன் பந்தப்படுவதில்லை. கண்ணாடியில் ஒருவனின் உருவம் தெரிகிறது. அவன் ஆடும்போது உருவமும் ஆடுகிறது. ஆனாலும் அவனுக்கும் கண்ணாடிக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. அவன் உருவம் கண்ணாடியில் பதிவதும் இல்லை. ஆகவே இங்கு கண்ணாடி கர்த்தா இல்லை. அர்ச்சுனன் தனது 'தான்', 'என்னுடைய' என்ற அகங்கார உணர்வுகளை விட்டதனால் - பந்த பாச பற்றுக்களை விட்டதனால், போர்க்களத்தில் பீஷ்மரைக் கொல்வது போன்ற அவனுடைய செய்கைகளுக்கு - தான் கர்த்தா இல்லை என்ற உணர்வு மேலோங்கி விளங்குகிறான்.]

ஞானம் ஞேயம் ப்ரிக்ஞாதா
த்ரிவிதா கர்மசோதனா
கரணம் கர்ம கர்த்தேதி
த்ரிவித: கர்ம ஸங்க்ரஹ: ॥ (18)

"வினையாற்றுவதற்கு அறிவு, அறியப்படும் பொருள், (ஞேயம்)

அறிபவன் ஆகிய மூன்றும் காரணங்களாக உள்ளன. (அது போன்று) வினைக்கு இருப்பிட மாக கருவி, வினை (கர்மம்), செய்பவன் (கர்த்தா) ஆகியன விளங்குகின்றன."

[உலகத்தைப் பற்றிய சிந் தனை ஓட்டமே அறிவு. அந்த உலகத்தில் காணப்பெ றும் பொருட்கள் நிகழ்ச் சிகள் யாவுமே அறியப்படும் பொருள்களாகும். அறிவால் உலகத்தை அறிபவன் ஜீவ னாவான். இம்மூன்றும் ஒன் றோடு ஒன்று பிணைந்தவையா கும். ஜீவனானவன் தன் அறிவு மயக்கத்தால், இடத்தால், குண பேதத்தால், சிந்தனை ஓட்டத் தால் பல மாறுபட்ட வினை களை மேற்கொள்கிறான். புத்தி, சித்தம், அகங்காரம் எனும் அகக் கருவிகளின் துணையாக, மெய், வாய், கண், மூக்கு, செவி மற் றும் கை, கால், வாய், எருவாய், கருவாய் எனும் பத்து புறக்க ருவிகளின் துணையாக, மயக்க அறிவுடைய ஜீவன் வினை களை மேற்கொள்கிறான். இந்த ஜீவனே கர்த்தாவாவான். அறி வும், வினையும் இந்த ஜீவாத் மாவிடமே இணைந்து விளங் குகின்றன. சீரிய அறிவுடன் பலன் எதிர்பாராத வினையாற் றும் போதுதான் ஜீவன் முக் திக்குரிய பக்குவத்தை அடை கின்றான். மனம், மொழி, மெய் சிறந்திட ஜீவன் பரம னைக் காணுகின்றான்.]

ஞானம் கர்ம ச கர்த்தா
ச த்ரிதைவ குணபேதத: ।
ப்ரோச்யதே குணஸங்க்யானே
யதாவச்ருணு தான்யபி ॥ (19)

"அறிவும், வினையும், செய்ப வனும் குணவேற்றுமையினால் மூன்று வகையாக உள்ளனர் என்று குணநலன்களைப் பற்றி பேசிடும் சாங்கியம் எனும் நூல் கூறுகின்றது. அதனைக் கேட் பாயாக."

[இயற்கை பற்றிய தத்துவ விளக்கங்களை அறிதற்கு கபி லர் இயற்றிய 'சாங்கியம்' எனும் நூல் விதிநூலாக உள்ளது. குண வேறுபாடு களைப் பற்றிய விளக்கங்களை இந்நூல் தெள்ளத்தெளிவாக கூறுகின்றது. மனிதன் அறி வால், செய்யும் செயல் திற னால் பலவகையாகத் திகழ் கின்றான். ஆகவே குணவேறு பாடுகள் மனிதனை எவ்வகை யில் மாற்றியமைக்கும் என் பதை அர்ச்சுனன் முகமாக பக வான் நமக்கு அறிவுறுத்துகின் றார்.]

(தொடரும்)

## ஆண்டவன் அடியாருக்கு என்றும் அடியவன்

திருக்குடந்தையில் திருவேங்கடமுடையான் ஆவிர்பவித்திருக்கிறார் என்பது குடந்தையில் எழுந் தருளியிருக்கும் பாதாள ஸ்ரீநிவாசன் வரலாறு மூலம் தெரியவருகிறது.

ஸ்ரீரங்கநாதப்பெருமாளே தன்னுடைய பிரணவாகார விமானத்திலிருந்து, வைதீக விமான மாகப் பிரிந்து மற்றொரு உருவாக எழுந்தருளியிருக்கிறார் என்று கும்பகோணம் மகாத்மியத்தில் சொல்லப்படுகிறது.

இவ்வாறு சிறப்புக்கள் பெற்ற கருணை கடலான பெருமானுக்கு தன் அடியார்களிடம் மிக்க அன்பும், பரிவும் உண்டு. பல நூற்றாண்டுகளுக்கு முன் லட்சுமி நாராயணஸ்வாமி என்பவர் சிறுவயது முதல் கடைசி வாழ்நாள் வரை கோவில் நித்ய கைங்கர்யத்தில் ஈடுபட்டு வந்தார். கோயிலின் கோபுரம், நகைகள், நஞ்சை, நிலம் போன்ற கைங்கர்யங்களை எல்லாம் பல மன்னர்களின் உதவியால் தன் மகனுக்கு தகப்பனார் செய்வது போன்று இவர் பெருமாளுக்கு செய்தார். அவர் அந்திமகாலம் நெருங்கி, பெருமானின் திருவடி சேர்ந்தார். இவரோ அனாதை. மனைவி, மக்களோ சுற்றமோ இல்லை. ஊர்மக்கள் சேர்ந்து அவருக்கு ஈமக்கிரியை செய்தார்கள். மறுநாள் அதிகாலை திருக்கோவிலை திறந்து பார்க்கவும் இப்பெருமாள் ஈரவேஷ்டியுடன் உடம்பில் மாற்றியுள்ள பூணூலுடனும், தர்ப்பங்களுடன் ஸமஸ்தாரம் செய்யும் கோலத்துடன் காட்சி அளித்தாராம். இதன்படி என்றும் ஐப்பசி மாதம் அமாவாசையன்று அந்த கைங்கர்ய பரருக்கு பெருமாளால் சிரார்த்தம் செய்து வைக்கப்படுகின்றது.

திருமதி. இரா. தெய்வவீரலெக்ஷ்மி - தூத்துக்குடி.



# திருமலை திருப்பதி தேவஸ்தானம்

## நூல் வெளியீட்டுத்துறை

### தமிழ் மொழியில் வெளிவந்துள்ளவை

| வரிசை எண். | நூலின் பெயர் | விலை ரூ. |
|---|---|---|
| 1. | ஆத்ம போதம் | 29-00 |
| 2. | மஹாபாரதக் கதைகள் | 7-00 |
| 3. | முக்கவிகண்ட காவியம் பகுதி-II | 20-00 |
| 4. | சித்திரத் திருப்பாவை | 15-00 |
| 5. | பகவத் ஸந்தேஷம் | 0-50 |
| 6. | நியாய ஸித்தாஞ்சனம் | 9-00 |
| 7. | அன்னமய்யா சங்கீர்த்தன மஞ்சரி | 10-00 |
| 8. | நித்யாநுஸந்தானம் (வடகலை) | 8-00 |
| 9. | நித்யாநுஸந்தானம் (தென்கலை) | 10-00 |
| 10. | திருவேங்கடமலை வரலாற்றுமாலை | 30-00 |
| 11. | காத்திடும் மங்கள சுலோகங்கள் | 3-00 |

### ஆங்கில மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | A Synopsis of Srimad Bhagavatham | 7-00 |
| 2. | Bhakta Purandra Dasa | 1-25 |
| 3. | Holy Trinity | 1-00 |
| 4. | Prasanna Venkatadasa | 1-50 |
| 5.** | Satguru Thyaga Brahma Pushpanjali | 250-00 |
| 6.** | 108 Vaishnavate Divya Desams Vol.III | 60-00 |
| 7.** | 108 Vaishnavate Divya Desams Vol.IV | 60-00 |
| 8.** | 108 Vaishnavate Divya Desams Vol.V | 70-00 |
| 9. | Urdhavamoola | 12-00 |
| 10. | Vyasarayalu | 0-75 |
| 11. | Visistadvaitha | 10-25 |
| 12. | Vision of Aryan Glory | 1-50 |
| 13. | Nammalvar | 3-00 |
| 14. | Tirumazhisai Alwar | 5-00 |
| 15. | Padmavathi Ammavari Temple | 2-00 |
| 16. | Vasishnava Sampradayam in Tirumala | 1-25 |
| 17. | Srimad Bhagavathgeetha | 20-00 |
| 18. | Gruhavaidyam | 6-00 |
| 19. | History of Tirupati-Vol.I | 37-00 |
| 20. | History of Tirupati-Vol.II | 30-00 |
| 21. | History of Tirupati-Vol.III | 10-00 |
| 22. | Tirumala-Tirupati-Tiruchanoor | 8-00 |
| 23. | Tirupati Sri Venkateswara | 100-00 |
| 24. | T.T.D. Inscriptions Report | 145-00 |
| 25. | T.T.D. Inscriptions Early No. 1 | 100-00 |
| 26. | „ Saluva Narasimhas Time No. 2 | 120-00 |
| 27. | „ Krishna Rayas Time No. 3 | 125-00 |
| 28. | „ Achyutaraya's Time No. 4 | 130-00 |
| 29. | „ Sadasivaraya's Time No. 5 | 150-00 |
| 30. | „ Venkatapati Raya's Time No. 6 | 100-00 |
| 31. | „ Epigraphical Glossary No. 7 | 120-00 |
| 32. | „ The Truth of Hinduism | 12-00 |
| 33. | A Hymn Venkateswara (Venkateswara Suprabhatam) | 10-00 |

### வட மொழியில் வெளிவந்துள்ளவை

| | | |
|---|---|---|
| 1. | அலங்கார சங்க்ரஹா | 16-00 |
| 2. | ப்ரஹ்ம்ம சூத்ர பாஷ்யம் | 30-00 |
| 3. | பாகவத மஹா புராணம் தொகுதி-I | 75-00 |
| 4. | கீதிகா நக்ஷத்ர மாலிகா | 2-50 |
| 5. | கோபால ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் | 5-00 |
| 6. | கபிலேஸ்வரசுவாமி சுப்ரபாதம் | 0-10 |
| 7. | லலிதா ஸஹஸ்ரநாமம் | 28-00 |
| 8. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18-00 |
| 9. | சீதாராமஞ்சநேயம் | 50-00 |
| 10. | தத்வ ஸங்க்யானம் | 2-00 |
| 11. | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-I | 49-00 |
| 12. | க்ரிஹ்ய சூத்ரஹ தொகுதி-II (இரண்டு தொகுதியும் சேர்ந்து) | 45-00 |
| 13. | பாகவத மஹா புராணம் | 100-00 |

குறிப்பு : தி.தி. தேவஸ்தானப் பதிப்பகத்தில் வெளிவந்துள்ள நூல்களை மொத்தமாகக் கொள்முதல் செய்பவர்களுக்கு கீழ்க்கண்டவாறு வர்ணிபக் கழிவு அளிக்கப்படும்.

1. ரூ. 100லிருந்து 500 வரை வாங்குவோருக்கு 15%
2. ரூ. 501லிருந்து 999 வரை வாங்குவோருக்கு 25%
3. ரூ. 1000லிருந்து அதற்குமேல் வாங்குவோருக்கு 30%

தயவு செய்து நீங்கள் விரும்பும் நூலின் விலை மற்றும் தபால் செலவோடு கேட்பு காசோலையாக "The P.R.O., Sales Wing of Publications, T.T. Devasthanams, Tirupati" எனும் பெயருக்கு எடுத்து இம்முகவரிக்கு அனுப்பவும். V.P.P. இல்லை. D.D. மட்டும் ஏற்றுக்கொள்ளப்படும்.

* அச்சில் ** கழிவு இல்லை.

# வைணவத் தேனமுது

திரு. எஸ். சுந்தரம் - திருமங்கலம்.

இவ்வுலகில் பல மதங்கள் தோன்றியிருந்தாலும் மேலோங்கி நிற்பது வைணவமேயாகும். வைணவம் என்ருல் என்ன? ஒவ்வொரு உயிரும் உணர வேண்டியதை உணர்த்துவதே வைணவமாகும். விஷ்ணுவாகிய பரம்பொருளை வணங்குபவர்கள் வைணவர்கள். பரம்பொருள் என்பது எங்கும் பரந்து நிலைத்துள்ள பொருளாகும். இதைத்தான் வடமொழியில் "விஷ்ணு" என்பார்கள். எங்கும் வியாபித்திருப்பவன் விஷ்ணு.

நீக்கமற எங்கும் நிறைந்திருக்கும் பகவான் விஷ்ணு "பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை" முதலான ஐந்து நிலைகளிலே அண்டமனைத்திலும் நின்று, இருந்து, கிடந்து அருள்பாலிக்கின்ருர். இந்த ஐந்து நிலைகளைப் பற்றியும் விளக்கிக்கொண்டே போனால் நிறைய விளக்கங்களும் சொல்லிக்கொண்டே போகலாம். ஆனால் அந்த பெரிய விளக்கங்கள் இப்போது நமக்கு தேவையில்லை என்ருலும் மிகவும் சுருக்கமாகவும் தெளிவாகவும் குறிப்பிடுவது அவசியமாகிறது.

### பரம் :

ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவியரோடு பரமபதத்தில் தன்னை விட்டுப்பிரியாத நித்ய முக்தர்களுக்கு (பூவுலகு வாழ்வு நீங்கிய புனிதர்கள்) வாழ்வளிக்கின்ற வைகுந்த வாசனின் ஆனந்த நிலையமே "பரத்துவம்" ஆகும்.

### வியூகம் :

படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலை இயற்றுவதற்கும், தேவர்களின் குறைகளை நிவர்த்தி செய்யவும், பாற்கடலில் அந்தப் பரமன் பள்ளி கொண்டிருக்கும் அந்த நிலையே "வியூகம்" எனப்படுவதாகும்.

### விபவம் :

மண்ணுலகில் தர்மங்களை சிதைக்கும்படி அதர்மம் செழித்த காலங்களிலெல்லாம், அதர்மம் அழிந்து, தர்மம் தழைத்தோங்கிட ராமன், கிருஷ்ணன் முதலான அவதாரங்களை அந்த ஆழிநாயகன் மேற்கொள்வதே "விபவம்" என்பதாகும்.

### அந்தர்யாமி :

பாலில் வெண்ணெய்போல, எள்ளுக்குள் எண்ணெய் போல, உடலுக்குள் சதைபோல எங்கும் ஒன்ருேடு ஒன்ருய் நிறைந்து உயிருக்கு உயிராய் இதயத்தில் எழுந்தருளி உயிர்களை உய்வித்து ஆர் உயிர் தனிப்பேருயிராய் விளங்குவது "அந்தர்யாமித்வம்"

### அர்ச்சாவதாரம் :

அடியவர்கள் விருப்பம்போல பொன், வெள்ளி முதலான உலோகங்களிலும், வைர விக்ரகத்தாலும் (வைரம் என்று இங்கே உலோகத்தை குறிப்பிடுவது அல்ல. கல்லினால் ஆனது என்று சொல்வதற்கு மாற்றுச் சொல்லாக பயன்படுத்துவது வைணவம். "தார், மண் அனைத்திலும் பிம்பம், ஓவியம் வடிவிலே தமர் உகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே" என்று எழுந்தருளி அருள் பாலிக்கும் "ஸ்ரீமந் நாராயணனின் வடிவமே அர்ச்சாவதாரம்".

அன்பர்கள் எந்த வடிவத்தில் விரும்புவார்களோ அந்த வடிவத்தில் அமைந்து அருள் பாலிப்பது "அர்ச்சாவதாரம்"

இந்த அர்ச்சாவாதரப்படி வைஷ்ணவ நாதனான விஷ்ணுவின் தோற்றமானது நீலமேக சியாமளனாக, திருவாழி, சங்கு ஏந்தியவராக மார்பில் மாலைகள், இரத்தின ஆபரணங்கள், கௌஸ்துப மணியை அணிந்தவராக, ஆதிசேஷன் என்ற பாம்பை படுக்கையாக ஏற்றவராக ஸ்ரீவத்ஸத்தை உடையவராக உலகையே காக்கக்கூடிய தன்மை உடையவராக விளங்குகிருர் என்று விஷ்ணு ஸ்துதி மிகத் தெளிவாக எடுத்துரைக்கிறது.

நின்ருன், இருந்தான், கிடந்தான் இப்படி மூன்று கோலங்களைக் கொண்ட திருமாலுக்கு ஞானம் (அறிவு) சக்தி (ஆற்றல்) பலம் (வலிமை) ஐஸ்வர்யம் (செல்வம்) வீரியம் (ஆண்மை) தேஜஸ் (ஒளி) முதலான ஆறு குணங்கள் மேன்மைக்குணங்களாம். இந்த ஆறு குணங்களையும் அளிக்கவல்ல தன்மையு

டையவன் ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே என்பதை விஷ்ணு புராணம் விளக்குகிறது. இவற்ேறாடு அறிவாற்றல், கருணை, பொறுமை, எளிமை, சமத்துவம். அழகு-இளமை போன்ற நீர்மைக் குணங்களும் அவனது அவதார காலங்களில் ஒளி விடுகின்றன.

திருமாலுடைய ஆயிரம் திருநாமங்கள் எல்லா க்ஷேமநலன்கள், ஐஸ்வர்யம் முதலியவற்றை அளிக்கக்கூடியது. இதை விஷ்ணு சகஸ்ரநாமம் என்று கூறுவார்கள். இதை பாராயணம் செய்பவர்கள் சகல க்ஷேமங்களையும் அடைவார்கள்.

திருமாலின் புகழ்பாடி அவரது திருவடி சேர்ந்த பெருமை பெற்றவர்கள் ஆழ்வார்கள் பன்னிருவராவர். 1) பெரியாழ்வார் 2) ஆண்டாள் 3) குலசேகராழ்வார் 4) திருமழிசையாழ்வார் 5) தொண்டரடிப்பொடியாழ்வார் 6) திருப்பாணாழ்வார் 7) மதுரகவியாழ்வார் 8) திருமங்கையாழ்வார் 9) பொய்கையாழ்வார் 10) பூதத்தாழ்வார் 11) பேயாழ்வார் 12) நம்மாழ்வார்.

ஆழ்வார்களின் பாடல்கள் மிகவும் சிரத்தையுடன் பாடப்பட்டது. இவற்றை நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் என்பார்கள். இவை நாலாயிரமும் நல்முத்துக்களைப் போன்றவை. வைஷ்ணவ ஆலயங்களில் பூஜா காலங்களில் திவ்யப் பிரபந்தங்கள் ஸேவிப்பர். இதை சாற்றுமறை என்று கூறுவர். ஆழ்வார்களின் காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை ஆகும்.

ஆண்டவனை ஆகம முறைப்படி வணங்க வேண்டும். ஆகமம் என்றால் என்ன? ஆலய வடிவமைப்பு, ஆண்டவனின் உருவமைப்பு, ஆராதனை விழாக்கள் பற்றிய விபரங்களையும் கொண்டதுதான் ஆகமம்.

வைணவ ஆகமங்கள் இரண்டு வகைப்படும். 1) வைகானஸம் 2) பாஞ்சராத்திரம். ஒவ்வொரு கோயில்களிலும் இன்ன ஆகம முறை என்று பிரித்து வைத்திருக்கிறார்கள். வைகானஸம், பாஞ்சராத்திரம் இரண்டிற்கும் அதிக வேறுபாடுகள் ஒன்றும் கிடையாது. சில விளக்கங்கள் மாறுபட்ட கருத்தை உடையது.

### பாஞ்சராத்ரம்

இதை மஹாவிஷ்ணுவே உபதேசித்ததாகக் கூறுவார்கள். மது, கைடபர் என்ற இரு அரக்கர்கள் வேதங்களைக் கவர்ந்துச் சென்று கடலுக்கடியில் ஒளித்து வைத்து விட்டார்கள். இதனால் பக்தர்கள் ஸ்ரீமந்நாரயணனை வழிபட வேண்டிய முறையை அறியாமல் தவித்துப் போனார்கள். பரந்தாமன் அவர்கள் பால் கருணை கொண்டு வழிபாட்டு முறைகளைத் தாமே ஐந்து ராத்திரிகளில் எடுத்துக் கூறி அருளினார். அதுவே பாஞ்சராத்ரம் எனப்படுவது.

### வைகானஸம்

வேதங்களை மீட்ட பகவான், தான் ஏற்கனவே அருளிய பாஞ்சராத்திரம் வழிபாட்டு முறையையே எல்லோரும் பின்பற்றுவதைக் கண்டார். வேத வழியில் வழிபாடு செய்ய யாரும் விரும்பாததைக் கண்டு, பகவானே விக்னஸ் என்ற முனிவரின் வடிவை எடுத்துக்கொண்டார். வேத முறைப்படி வழிபாடு செய்து மற்றவர்களையும் இம்மாதிரியே வழிபடச் செய்தார். விக்னஸ் என்ற முனிவர் வகுத்ததால் இது வைகானஸம் என்ற பெயர் பெற்றது. இது வேதாகம முறைப்படி அமைந்தது.

### திருமாலின் ஈராறுநாமம்

கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திருவிக்ரமன், வாமனன், ஸ்ரீதரன், ஹ்ருஷீகேசன், பத்மநாபன், தாமோதரன் என பெயர்கள் உண்டு. இதை துவாதச நாமாக்கள் என்று கூறுவர். திருமாலினுடைய இந்த ஒவ்வொரு பெயருக்கும் ஒவ்வொரு விளக்க ஸ்லோகமும், வெண்பாவும் உண்டு. ஆனால் இங்கு ஒவ்வொரு பெயரின் அம்சங்கள் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளது.

### கேசவன்

நெற்றியில் திருமண் இட்டுக்கொள்ளும் போது இவர் பெயரை உச்சரிக்க வேண்டும். நான்கு கைகளில் சக்ராயுதத்துடன் தங்க நிறத்தில் விளங்கும் பெருமாள். தாயார் திருநாமம் ஸ்ரீதேவி, உகந்த மாதம் மார்கழி.

### நாராயணன்

நான்கு கைகளிலும் சங்கு. கருப்பு வர்ணம். தாயார் பெயர் - அம்ருதோத்பவ. இவருக்கு உரிய இடம் வயிறு மாதம்-தை.

### மாதவன்

நான்கு கைகளிலும் கதாயுதம் நீலவர்ண நிறத்தான். தாயார் பெயர்-கமலம், இவருக்கு உரிய இடம் மார்பு. மாதம்-மாசி.

### கோவிந்தன்

நான்கு கைகளிலும் வில். சந்திர வர்ணத்தான். தாயார் பெயர் சந்திர சகோதரி. உரிய இடம் முன் கழுத்து. மாதம்-பங்குனி.

### விஷ்ணு

நான்கு கரங்களிலும் கலப்பை, தாமரைத் தாதுவின் நிறம், தாயார் பெயர்-வரோரோஹா- உரிய இடம் வயிற்றின் வலதுபுறம். மாதம் சித்திரை.

### மதுசூதனன்

நான்கு கைகளிலும் உலக்கை, தாமரைப் பூவர்ணம். தாயார் பெயர்-ஹரிவல்லபா, உரிய இடம்-வலது புஜம். மாதம்-வைகாசி.

### திரிவிக்கிரமன்

நான்கு கரங்களிலும் கத்தி, நெருப்புநிறம். தாயார் பெயர் விஷ்ணுபத்னீ. உரிய இடம் வலக்கழுத்து. மாதம்-ஆனி.

### வாமனன்

நான்கு கைகளிலும் வஜ்ராயுதம், சூரியவர்ணம், உரிய இடம்-வயிற்றின் இடதுபுறம். தாயார் பெயர்-வைஷ்ணவி மாதம்-ஆடி.

### ஸ்ரீதரன்

நான்கு கைகளிலும்-பட்டஸம் என்ற ஆயுதம்.வெண்தாமரை வர்ணம், தாயார் பெயர்-சார்ங்கினி. உரிய இடம்-இடது புஜம். மாதம் - ஆவணி.

### ஹிருஷீகேசன்

நான்கு கரங்களிலும் சுத்தி, மின்னல் நிறவர்ணன், தாயார் பெயர்-தேவதேவிகா. உரிய இடம்-இடக்கழுத்து, மாதம் - புரட்டாசி.

### பத்மநாபன்

சங்கு, சக்கரம், கதை, வில், வாள் என்ற ஐந்து ஆயுதங்களையும் ஏந்தியவன், தாயார் பெயர்-மஹாலட்சுமி உரிய இடம்-முதுகு, மாதம்-ஐப்பசி.

### தாமோதரன்

நான்கு கைகளிலும்-கயிறுகள், சிவப்பு நிறம், தாயார் பெயர்-ஸுரஸுந்தரி. உரிய இடம்-பின் கழுத்து. மாதம் - கார்த்திகை.

உரிய இடங்கள் ஒவ்வொரு நாமத்திற்கும் கொடுக்கப்பட்டுள்ளன. அந்த நாமங்களின் பெயரை சொல்லி திருமண் காப்பு அந்தந்த இடங்களில் இட்டுக் கொள்ளுதல் வேண்டும்.

ஸ்ரீவைஷ்ணவ நெறியை பேணி வளர்த்தவர்கள் ஆழ்வார்கள் என்று ஏற்கனவே குறிப்பிட்டிருந்தோம். ஆழ்வார்களுக்குப் பிறகு வைணவ மதத்தை வேரூன்றி ஸ்தாபிக்கச் செய்தவர் எம்பெருமானார் என்ற உடையவர் என்ற ஸ்ரீராமானுஜர் ஆவர். ஸ்ரீபெரும்புதூரில் அவதரித்த அவர் ஸ்ரீமந் நாராயணனையே உயிராகக் கொண்டவர். ஓம் நமோ நாராயணுய என்னும் அஷ்டாக்ஷர மந்திரத்தை உலகமறியச் செய்தவர். திருமாலின் மனதில் எப்போதும் உடையவர். உடையவர் என்னும் சிறப்புப் பெயரே பெற்றவர். விசேஷ அத்வைதம் என்ற விசிஷ்டாத்வைதத்தை நிறுவியவர்.

விசிஷ்டாத்வைதத்தைப் பரப்ப, ஸ்ரீமத் பாகவதம் போன்ற இதிகாச நூல்கள், பாஞ்சராத்ர ஆகமங்கள் எனும் ஆகம நூல்கள் மற்றும் ஆழ்வார்கள் இயற்றிய நாலாயிர திவ்யப் பிரபந்தங்கள் ஆகியவற்றின் துணையை நாடி பயன்படுத்தினார். பாஞ்சராத்ர ஆகம முறையை பகவான் அளித்த வழியில் ஆராய்ச்சி செய்து வழங்கியவர் ஸ்ரீராமாநுஜரேயாவார்.

ஸ்ரீராமாநுஜரின் விசிஷ்டாத்வைதம் உபாசன மார்க்கங்களின் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆண்டவன் நம்மை இயக்குபவர். அவர் முழுமையானவர்; நாம் பாகமே. அவன் முடிவு; நாம் வெறும் கருவியே. ஆகையால் ஆத்மா அந்த உயர்ந்த பரம் பொருளை வெளியிலிருந்து தான் உய்த்து உணர வேண்டும். அவனைச்சரணு கதி அடைந்தால் நாம் உயர்ந்த நிலையை அடையலாம் என்பது அவருடைய போதனை. அர்ச்சாவதாரப்படி நாம் எந்த ரூபத்தில் நினைக்கின்றோமோ அந்த ரூபத்தில் காட்சி கொடுப்பவர்தான் திருமால்.

விஷ்ணு எனும் பரமாத்மாவை பிரத்தியக்ஷம், அனுமானம் ஆகிய பிரமாணங்களால் மட்டும் அறிய முடியும் என்பதை ஏற்றுக் கொள்ள முடியாது. வேதங்களினாலேயே அந்தத் தத்துவத்தை முழுவதும் அறிய முடியும் என்று வேதவியாசர் கூறியுள்ளார். "உளன் சுடர்மிகு சுருதியுள்" என்று நம்மாழ்வாரும் கூறியுள்ளார். வேத நாயகன் ஒருவனே. அவன்தான் விஷ்ணு. இதையெல்லாம் விளக்கிக் காட்டியுள்ளவர் ஸ்ரீராமாநுஜரே.

வைணவர்கள் அன்புடையவர்கள். அறம் செய்பவர்கள். யாவருக்கும் தொண்டு செய்பவர்கள்.

ஆகவே அவர்கள் இறைவனிடத்தில் பக்தியும் ஆச்சார்யனிடத்தில் பக்தியும், இறையருளே பெரிதென்று எண்ணி வாழ்தல் வேண்டும். "பஞ்ச சம்ஸ்காரம்' எனப்படும் வைணவ சம்பிரதாயங்களின் சடங்குகளை அதில் நிறைந்துள்ள · தத்துவங்களை யாவருக்கும் புரியும்படி எடுத்துச் சொல்லுதல் வேண்டும். சக்கரப்பொறி ஏற்றுக் கொள்ளுதல், பன்னிரு திருநாமம் அணிதல், அடிமைத் திருநாமம் ஏற்றல், திருமந்திர உபதேசம் பெறல், திருவராதனம் செய்தல் முதலான ஐந்தும் குருமுகமாய் பெறும் ஐந்து சம்ஸ்காரங்களாகும். இதுபோன்று கீதைவழி நடந்து மேலே சொன்ன தத்துவங்கள் அனைத்தும் வைணவர்களின் தனித்தன்மையாகும்.

காரண காரியமாய் எங்கும் எதிலும் நிறைந்துள்ள நாரணனை நாமடையும் நன்னெறிகளுள் கரும, ஞான, பக்தி நிலைகளைவிட "பிரபத்தி" (சரணாகதி) சிறந்த வழியாகும். இறைவனை சரணாகதி அடைந்துவிட்டால் நம்நிலை உயர்ந்து விளங்கும்.

## நவராத்திரி வழிபாட்டின் வடிவங்கள்

1. மகேஸ்வரி
2. கௌமாரி
3. வராஹி
4. மகாலட்சுமி
5. வைஷ்ணவி
6. இந்திராணி
7. மகா சரசுவதி
8. நாரசிம்மி
9. சாமுண்டி

திரு. சதயன்-காஞ்சிபுரம்.

வாருங்கள்! காணுங்கள்!!

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## ஆலய தரிசன சுற்றுலா



ஒவ்வொரு நாளும் திருப்பதி இரயில் நிலையத்திற்குப் பின்புறம் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் இரண்டாவது தரும சத்திர வளாகத்திலிருந்து இந்த 'ஆலய தரிசன சுற்றுலா' பேருந்து, காலை 7-00 மணி அளவில் புறப்பட்டு மதியம் 1-30 மணி அளவில் புறப்பட்ட இடத்திற்கே வந்து சேரும்.

### காணும் ஆலயங்கள் :

1) ஸ்ரீவேணுகோபாலசுவாமி கோயில்-கார்வேட்டுநகரம்.

2) ஸ்ரீவேதநாராயணசுவாமி கோயில்-நாகலாபுரம்.

3) ஸ்ரீகல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில்-நாராயணவனம்.

4) ஸ்ரீபத்மாவதி தாயார் கோயில் -திருச்சானூர்.

### பேருந்து கட்டணம் :

பெரியோர் : ரூ. 38/- (நபர் ஒருவர்க்கு)

சிறுர் : ரூ. 17/- (நபர் ஒருவர்க்கு)

[சிறப்பு தரிசன வசதியும் செய்துதரப்படும்.]

இந்தப் பேருந்தில் பயணிக்கும் பக்தர்களுக்கு அன்ன பிரசாதம் ஒருமுறை வழங்கப்படும்.

# கோயில் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் நலவாழ்விற்காக

## நன்கொடை விண்ணப்பம்

கோயில்கள் மக்களுக்கு ஆன்மீக இன்பத்தினை தந்திடுவது மட்டுமன்றி இந்தியக் கலா சாரத்தின், சனாதன தர்மத்தின் பெருமையை விளக்கிடும் வெற்றிச்சின்னங்களாக காலம் காலமாக விளங்கிவருகின்றன.

அர்ச்சகர்களுக்கும் மற்ற ஊழியர்களுக்கும் போதுமான ஊதியம் அளிக்க இயலாமல் போதிய வருவாயும் இல்லாத 20,000க்கும் மேற்பட்ட கோயில்கள் ஆந்திர மாநிலத்தில் உள்ளதென்பது மறைக்க முடியாத செய்தியாகும். பெரும்பாலான கோயில்களில் அர்ச்சகர்களுக்கு அளிக்கும் ஊதியம் கோயிலில் வருகின்ற அற்ப வருவாயின் மீது ஆதாரப்பட்டுள்ளமை வருந்தத்தக்க செய் தியாகும். இதனால் அர்ச்சகர்களும் மற்ற ஊழியர்களும் வறுமையின் காரணமாக அவர்களுடைய பிள்ளைகளுக்குத் தகுந்த அடிப்படைக் கல்வியினைக்கூட அளிக்கமுடியாமல் செலவுகளைத் தாங்கிக் கொண்டு ஏழ்மையில் வாழ்கின்றனர்.

இந்திய உச்சநீதிமன்றத்தின் அறிவுரைப்படி ஆந்திர மாநில அரசு ஒரு குறிப்பிட்ட தொகை யினை அதாவது ரூ. 75 கோடி கூட்டுநிதியாக தற்காலிகமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்றும், அத்தொகையினை உயர்ந்த நிலையில் உள்ள கோயில்களிலிருந்தும், மற்றும் அனுமதிக்கப்படும் மற்றைய வழிகளின் மூலமும் பெற்று ஒரு நலவாழ்வு திட்டத்தின் கீழ் இத்தொகையினை அறநிலையத்துறையின் மேற்பார்வையின் கீழ் செயல்படும் கோயில்களில் பணிபுரியும் அர்ச்ச கர்கள் மற்றும் இதர ஊழியர்களின் நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்றும் ஆணை பிறப்பித்துள்ளது.

இத்திட்டத்தின்கீழ் கோயிலில் பணிபுரியும் அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்களின் குடும் பங்களுக்குத் தகுந்த வீடு, கல்வி மற்றும் ஆகம கல்வி போன்றவையும், மருத்துவ வசதியும், அவர்களுடைய பிள்ளைகளுக்குக் கல்வி வசதியும், அவர்கள் சொந்த வீடு கட்டிக்கொள்ள கடனுதவியும், கூட்டு காப்பீட்டுத்திட்டமும், எதிர்பாராத விபத்திற்கும், இறப்பு முதலானவைக்கும், விதவைகளுக்கு மறுவாழ்வு, காப்பகங்கள் அல்லது அவர்களுக்கு தேவையான பொருளுதவியும், படித்த வேலையில்லாத இளைஞர்களுக்கு பொருளுதவியும் அளிக்க இந்த நலவாழ்வு திட்டம் அமுலுக்கு கொண்டு வரப்படுகிறது. ஆந்திர மாநில அரசாங்கத்தின் விதிமுறைகளின்படி அவ் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழும் மேற்பார்வையிலும் இந்த நிதிதிட்டம் செயல்பட இந்திய உச்ச நீதிமன்றத்தால் அங்கீகரிக்கப்பட்டு இந்திய குடியரசு தலைவர் அவர்களால் 1-6-97-இல் இத்திட்டம் துவக்கி வைக்கப்பட்டது.

இது தொடர்பாக ஆந்திரமாநில அரசு வெளிநாட்டில் மற்றும் இந்தியாவில் உள்ள பல்வேறு நிறுவனங்களிடமிருந்தும் நன்கொடை கோரியுள்ளது. இவற்றிற்கு வருமானவரி விலக்கு கோரி வருமான வரித்துறை மற்றும் இந்திய அரசிடம் மாநில அரசு விண்ணப்பித்துள்ளது.

ஆகையால் அனைத்து அமைப்புகள், நிறுவனங்கள் மற்றும் இரக்க குணமுடைய பொதுமக் கள் அனைவரும் நன்கொடையாக தாராளமாக பொருள் தந்து உதவிடுமாறு ஆந்திர மாநில அரசு கேட்டுக்கொள்கின்றது. நன்கொடை அனுப்புவோர் தொகையினை கேட்பு காசோலையாகவோ அல்லது காசோலையாகவோ "அர்ச்சகர்கள் மற்றும் ஊழியர்கள் நலவாழ்வு திட்ட நன்கொடை" என்று குறிப்பிட்டு "The Commissioner, Endowment Dept., Govt. of Andhra Pradesh, Hyderabad" எனும் பெயருக்கு எடுத்து அனுப்பவும்.

(தொடர் கட்டுரை)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## ம

மக்கள் பெருத மலடன் - பிள்ளை பெருதவன்

மக்கள் மனம் மாதர்க்குத்தெரியும் - குழந்தைகள் மனம் பெண்டிர்க்கே தெரியும்

மக்கள்வயது நூறு - மக்களுக்கு வேத சாத்திரப் படி விதிக்கப்பட்ட வயது 100

மக்கள் அறுவர் - கண்ணனுக்கு முன் பிறந்த ஆறு பிள்ளைகள்

மக்காணி - பருமனான உடல்

மகம் - வேள்வி, யாகம்

மகப்பு - அதிசயம்

மகப்புருவம் - ஆச்சரியமான வடிவு

மகரக்குழை - சுறுமீனின் வடிவமையச் செய்யப்பட்ட காதணி.

மகரக்கடல் - மீன், முதலைகள் நிரம்பிய கடல்.

மகரக்குழைக்காதன் - மகரம் முதலை, முதலை போல தங்கத்தில் செய்து அதன் வாயையும் வாலையும் சேர்த்துக் கோத்து காதில் ஆண்கள் அணிவது. பெண்களுக்கு இந்த ஆபரணம் வழக்கமில்லை; தென்திருப்பேரை திவ்ய தேசத்து எம்பெருமானின் பெயர் மகர நெடுங் குழைக்காதன். இங்கு மகரம் - மீன்.

மகள் தாய் செய்து - தாயாக ஒரு பெண் தன்னைச் செய்து கொண்டு. இது பூதனை.

மகள் பேசி - பெண் பேசி; கல்யாணப் பெண்ணுக்கப்பேசி

மகன்றில் - அன்றில் பறவையின் ஒரு வகை; கிரவுஞ்சபட்சி என்பர்;

மகனாக்கொண்டு - மகனாக பாவித்து;விரும்பி.

மகாவிருக்ஷம் - இலவ மரம்; கள்ளி

மகிழ்கொள் சிந்தை - மகிழ்ந்த மனது;

மகிழ்கொள் சோதி - மகிழ்ந்த சோதி; பிரகாசிக்கிற சந்திர சூரியர்கள்

மகிழ்கொள்தேவர் - மனிதர்களைவிட ஆனந்தமுள்ள தேவர்கள்

மகிழ்மாலை - மகிழம்பூமாலை

மகிழலகு - மகிழம் விதை; கணிதத்தில் வல்லவனான ஒருவன் ஒரே மகிழ விதையை ஒரு சமயத்தில் காணி ஸ்தானத்தில் (மிகத்தாழ்ந்தது) வைத்துக் கணக்குப் பார்ப்பான்; மற்றொரு சமயத்தில் கோடி ஸ்தானத்தில் (மிக உயர்ந்தது) வைத்துப் பார்ப்பான். நவீன மேனாட்டு கணக்கில் அல்ஜீப்ரா கணக்கு முறையில் X என்னும் எழுத்துக்கு உள்ள மதிப்பு என்பர் புத்தூர் ஸ்வாமி.

மகுடம் - கிரீடம்; தலை

மங்குதல் - நசித்தல்; அழிதல்

மங்கலநகர் - மங்களமான நகரம்

மங்குகை - குறைகை

மங்குல் - ஆகாசம்; மேகம்; துவட்சி; அறிவின்மை; பற்றினதை விடாமை

மங்கலவீதிவலம் - கல்யாணத்திற்காக அலங்கரித்த வீதியிலே வலம் வருகை, மங்கலம்- கல்யாணம்

மங்கலவைம்படை - காப்பான பஞ்சாயுதம்

மங்கவொட்டு - மங்குவதற்கு-நசிவதற்கு இசை.

மங்கிய அருவாம் நேர்ப்பம் - அஸத்ஸமமான, அரு-நுட்பமான, நேர்ப்பம்-சித்து அசித்துக்கள்

மங்கியமானிட சாதி - அழிந்து கிடக்கும் மானிட சாதி

மங்கிய வல்வினை - பிரித்தறியாத படியான வலிய வினைகள்

மங்குல் மதி - ஆகாசத்திலே திரியும் சந்திரன்

மங்கைக்குலம் - திருமங்கையிலுள்ள ஜனங்கள்

மங்கைகுலவேந்தன் - திருமங்கைநகருக்கு தலைவரான திருமங்கை ஆழ்வார்

மங்கைதன்பங்கன் - சிவபெருமான்

மங்கை நல்லாய் - பருவத்தால் இளையவராய் நல்லகுணமுடையவர்கள்

மங்கை மணநோக்கம் - பெரிய பிராட்டியாருடைய மங்களத்தை உண்டுபண்ணும் பார்வை-கடாக்ஷம்

| | |
|---|---|
| மங்கைமன் மங்கையர்கோன் | திருமங்கையாழ்வார்; திருமங்கைநகருக்கு மன்னன் |
| மங்கையர் தோன்றல் | திருமங்கைநாட்டுக்கு பிரதானர் |
| மங்கையராய்ச்சியர் - | இளம் பெண்களான இடைச்சிகள் |
| மங்கை வேந்தன்-பரகாலன் | திருமங்கையாழ்வார் |
| மச்சணி மாடங்கள்- | பலநிலங்களையுடைய தாய் அலங்கரித்த மாடங்கள்; பலநிலம்- தளத்தின் மேல் தளம். மச்சை அணியாக உடைய வீடுகள் |
| மச்சு - | மேற்றளம் |
| மச்சம் - | சிறிய வெட்டு; ஆபரணம் பண்ணுபவன் வெட்டி வைக்கும் பொன்; அடையாளம் |
| மச்சாவதாரம் | அசுரர் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டு அருளிய அவதாரம் மச்சாவதாரம் |
| மச்சொடு மாளிகை- | மேல்மாடம் |
| மசக்குப்பரல் - | மசக்கின வினாதுலுங்கா விரை; சந்தேகத்தை உண்டாக்கும் விரை |
| மசிமையிலீ - | வெட்கமில்லாதவனே! |
| மஞ்சனம் - | நீராடுதல்; மஞ்ஜநம்-மூழ்குதல், அமிழ்தல்; இது வடசொல் |
| மஞ்சாடுவரை - | மேகங்கள் திரிகிற மலை |
| மஞ்ஞை - | மயில் |
| மஞ்சரி - | பூங்கொத்து |
| மஞ்சாடி - | குன்றிமணி; கழஞ்சி |
| மஞ்சியாக - | கூட்டமாக |
| மஞ்சு - | அழகு; ஆபரணம்; இளமை; மேகம்; முகடு; யானை முதுகு. |
| மட்டம் - | குறைவு |
| மட்டிக்கை - | குறைக்கை |
| மட்டிட - | மட்டிக்க - குறைக்கக் குறைக்க |
| மட்டித்து - | அரைத்து; மத்தித்து; வீசி |
| மட்டு - | தேன்; அளவு; ஆழம் முழங்கால் மட்டு; மார் மட்டு ஆழம் என்று சொல்லுகிறோம் |
| மட்டு மாத்திரம் - | சமியாத மட்டைக்கொண்டு |
| மட்டுக்களிலே - | 'சாஸ்திரம் சொன்ன' - சாஸ்திரம் சொன்ன வரையில், அந்தமட்டிலே என்பதுபோல |
| மட்டையர் - | மொட்டையர்; தலையை மொட்டை அடித்திருக்கும் சமணர் |
| மடக்கன்னி - | மடப்பமுள்ள கனனி, மடப்பமாவது பற்றிற்று விடாது ஒழிகை, கன்னி-அறிவில்லாதவள். |
| மடக்கிளி மடக்குயில் - | பெண்குயில் |
| மடக்குறமாதர் - | மடப்பம் என்ற ஆத்ம குணமுள்ள குறப்பெண்கள் |
| மடக்கொடி - | கொள்கொம்போடு சேர்க்க வேண்டும் பருவத்தில் இருப்பவள் |
| மடக்கோலை - | கடிதம், திருமுகம் |
| மடக்கொம்பு - | அடக்கமான அழகான பெண் |
| மடங்க - | முடிந்துபோம்படியாக |
| மடங்கல் - | சிங்கம் |
| மடங்குதல் - | சுருண்டு விழுதல் |
| மடந்தையர் - | யுவதி; பெண்கள் |
| மடநெஞ்சு - | விடாப்பிடியுள்ள மனம் |
| மடநாகு - | இளம்பசு |
| மடநோக்கி - | அழகான பார்வையுடையவள் |
| மடப்பம் - | பற்றினது விடாமை; அறிவின்மை; சபலம், அழகு, வெட்கம் |
| மடமை - | கொண்டது விடாமை |
| மடம் - | மடப்பம் |
| மடல் - | தளம், பனஓலை, இதழ் |
| மடல் - | மடலூர்தல், மடலெடுத்தல்-பெண்பிள்ளை தான் காதலித்த காதலன் சம்மதிக்காத்தை கையில் பனை ஓலை கொண்டு குதிரை மீதுஏறி ஊரெல்லாம் திரிந்து வெளிப்படுத்துவது. |
| மடவார் கேள்வன் - | பெண்களுக்கு விரும்பத்தக்கவன் |
| மடல் வாழை - | பூ மடலையுடைய வாழை |
| மடவால், மடவல்லி - | மடப்பத்தையுடைய பெண் |
| மடவாளரைம்பால் - | பெண்களின் மயிர்முடி |
| மடி - | சோம்பல்; புடவை |
| மடிச்சரக்கு - | மடியிலே வைத்திருக்கும் சரக்கு, புடவை; மடியிலுடுத்த புடவை |
| மடி தடவாத-சோறு | மடி தடவிப்பார்த்து காசு வாங்காமல் பிரியமாக இட்டசோறு |
| மடி தடவுதல் - | மடியிலுள்ள பொருளை அபகரித்தல் |
| மடி பிடித்தல் - | நிர்பந்தித்தல் |
| மடிதாறு - | மடிசாறு, மணமான பெண்கள் ஒருகாலில் சீலையைக் கொசுவித் தொங்கவிட்டு மறுகாலில் ஒட்ட உடுப்பதல்லாமல் இருகாலிலும் ஒட்டவுடுப்பது, வைணவப் பெண்கள் உடுத்தும் விதம்; |

கச்சம் வைத்து உடுத்துவதற்கும் பெயர்.

மடிப்பிச்சை - பாத்திரம் கூட இல்லாமல் மடியில் வாங்கும் சிறு பிச்சை

மடிபிடித்து - சண்டையிட்டு

மடிமாங்காயிடுதல் - மடியிலே மாங்காயைப் போட்டு ஏன் எடுத்தாய் என்று கேட்பது; குற்றத்தை ஏறிட்டுச் சுமத்தல்

மடியகத்துச் செல்வம் - கிழிச்சீரையில் செல்வம்

மடியகம் - பக்கலில்; மடியில்

மடியடக்கி நிற்பதனில் - துணியை ஒதுக்கி அகலப் போய் வெட்கத்தோடு திரிவதைவிட,

மடியேற்போம் - யாசிப்போம்

மடிவழிவந்து - இந்திரியத்தாலே வந்து

மடிவித்து - மடியச் செய்து; அழியச் செய்து

மடு - அழகான இடம்; பொய்கை

மடுக்க - அடக்க

மடுக்கை - பானம் பண்ணுகை;

மடுத்த - ஊன்றின; பெருகின; ஸமர்ப்பித்த

மடுத்து - அடக்கி

மடுத்துப்பிடிக்கை - கைமடக்கிப் பிடிக்கை

மடை - நீர்த்தாரை

மடைத்தலை - நீர்த்தாரைகளில்

மடைமாற்றுகை - நீரோட்டத்தை மாற்றுகை

மண்கொடுத்தவர் - மகாபலி சக்ரவர்த்தி மண்-பூமி

மண் கொள் வசுதேவர் - பூமியில் வாழும் வசுதேவர்

மண் கொள்ஞாலம் - பூமி முதலான உலகம்; பூமி ப்ரதானமான உலகம்

மண் கொள்ளுகை - கரை காண்கை.

மண் கொள்ளுலகு - மண் மிஞ்சின உலகம்

மண்கோட்டுக் கொண்டான் - பூமியை கோரப்பல்லின் மீது எடுத்து வந்த பெருமான்; வராகப்பெருமான்

மண்டி - விரும்பி; சிரத்தையோடு; எழுப்ப முடியாதபடி; மிக்கு

மண்டிணி - மண் செறிந்த பூமி

மண்டியுண்டு - பரந்து உண்டு

மண்டினார் - விரும்பினார்

மண்டு - என்றுமொக்கப்பரந்து

மண்டுகை - விரும்புகை; தள்ளுகை

மண்டுதல் - ஈடுபடுதல்

மண்டுவெஞ்சமத்து - மிகைத்திருக்கிற போரிலே

மண்டை - கபாலம்; பிச்சைக்கலம்

மண்டோதரி - இராவணன் மனைவி

மண்டோதரி காதலன் - இராவணன்

மண்ணகத்தான் - பூமியிலே வந்து அவதரித்தவன்

மண்ணகம் - பூமி

மண்ணகலம் - பூமியின் பரப்பு

மண்ணது - பூமியிலுள்ளது

மண்ணரசு - பூமியில் இராச்சியம்; பூமியில் ஆதிபத்யம்

மண்ணலங்கொள் வெள்ளம் - மண்ணலம் - பூஸாரம். அத்தை அழியாநின்ற வெள்ளம்

மண்ணவர் - பூமியில் உள்ளவர்கள்

மண்ணி - மண்ணியாறு; திருவெள்ளியங்குடியில் பாயும் நதி.

மண்ணியின் தென்பால் - மண்ணியாற்றின் தென்கரை

மண்ணுண்ணும் படி - மண்ணைக்கவ்வும்படி; தோற்கும்படி

மண்ணும் மணமும் கொள்ளுதல் - அடிமைவிலை ஓலை எழுதும் போது மண்ணுக்கும் மணத்துக்கும் உரியனாக வேணுமென்றே எழுதுவது; மண்-பெருமாளின் மங்களத்துக்காக அங்குரார்ப்பணத்துக்கு புழுதி மண் சுமக்கை. மணமாவது-கல்யாணத்துக்கு தான் அபிமாநியாயிருககை. இவ்விரண்டும் எல்லா கைங்கர்யத்துக்கும் சொன்னபடி.

மண்ணை - ஆற்றுக்கும் பட்டணத்துக்கும் பெயர்; திருச்சிற்றூறு என்பது ஆற்றுக்கும் திருப்பதிக்கும் பேராகிறுப்போலே, மழுங்குகை; மூடன்

மண்பகர் கொண்டான் - பகர்ந்த மண்ணைக் கொண்டவன்; பகர்தல்-சொல்லுதல். மூவடி மண்தா என்று சொன்னது

மண்பல கொண்டான் - பதிநான்கு உலகத்தையும் கொண்டவன்

மண்பத்து/பற்று - அஸாரம்; மண்ணுன பாகம்

மண்பாடு - மண்மிகுதி; பூமிபலம்; மண்வாசி

மண்மகள் மண்மடந்தை மண்மாதர் - பூமிப்பிராட்டி

மண்மீது உழல்வான் - பூமியில் அவதரித்து திரிபவன்

மண்முதல் சேர்வுற்று - மண்-பூமி, முதல்-மலையடி, பூமிப்ரதேசமான மலையடிவாரத்தில் வந்து கிட்டி

மணக்குகை - உகப்பிக்கை; கலக்கை

(தொடரும்)

# இராமநாதர் திருக்கோயில்

திரு. வெ. சுந்தரம் ஐயர் - பரமக்குடி.

பாரதநாட்டுப் பாரம்பரியம் தேசிய ஒருமைப்பாடடை ஆன்மீக நெறியில் அகிலமே போற்ற விளக்குவது. "காசி முதல் ராமேஸ்வரம் வரை" என்ற பழமொழியும் அறிந்ததே!

தேசிய ஒருமைப்பாட்டுத் தலமான இராமேஸ் வரம் பழமைக்கு எடுத்துக்காட்டாகவும் புதுமைக்கு நல்லணிகலனாகவும் விளங்குவதாகும்.

இருக் வேதம் முதல் பல் வேறு நூல்களில் இராமேஸ்வரம் குறிப்பிடப்பட்டுள்ளது. பல் வேறு ஆன்றோர்களால் வழிபட்டு பாடல்களால் மங்களா சாசனம் செய்யப்பட்டது.

இராமேஸ்வரம் திருக்கோயிலின் சிறப்புக்கள் பற்றி அறிந்திருந்தாலும், ராமகாதை கேட்கக் கேட்கத் திகட்டாநிலைபோல, மீண்டும் அறிவது ஆன்மாவின் உயர்வுக்கு உரியதாகுமன்றோ?

இராமநாதம், பத்ரிநாதம், துவாரகநாதம், ஜெகந்நாதம் என்பதை அறிவோம். இதில் இராமநாதம் ஒன்றே சிவத்தலம். எனினும் விஷ்ணுவுக்கும் சிறப்புண்டு. மற்ற மூன்றிலும் வைணவத் தலங்களாக விளங்குகின்றன.

இராமாயண காலத்தில் தோன்றிய இக்கோயில் பனிரெண்டாம் நூற்றுண்டுவரை கூரைக் கொட்டகையில் ஒரு துறவியின் பாதுகாப்பில் இருந்துவந்தது.

கி.பி. பனிரெண்டாம் நூற்றுண்டில் இலங்கைவேந்தன் பராககிரமபாகு இக்கோயில் மூலஸ்தானத்தைக் கட்டியதாகத் தெரிகிறது.

பதினைந்தாம் நூற்றுண்டில் இராமநாதபுரம் மன்னர் உடையான் சேதுபதி அவர்களும், நாகூரைச சேர்ந்த வைசியர் ஒருவரும் மேற்கு கோபுரம், மதில் சுவர்களை ஏற்படுத்தினர். மதுரை அன்பர் ஒருவரால் அம்பாள் கோவில் பிரகாரமும் மற்றும் பல திருப்பணிகளும் செய்துள்ளனர்.

பதினாறும் நூற்றுண்டில் தெற்கு இரண்டாம் பிரகாரம் மன்னர் திருமலை சேதுபதியால் ஏற்படுத்தப்பட்டது. அம்பாள் சந்நிதி வாயிலின் தெற்குப்புரம் மன்னர் திருமலை மற்றும் அவரது மகன் ரகுநாத சேதுபதியின் திருஉருவங்கள் உள்ளன. ஒவ்வொரு வெள்ளிகிழமையும் இவ்வுருவங்கட்கு மாலைசூட்டி மரியாதை செய்யப்படுவது மகிழ்வுக்குரியதாகும்.

பலர் பல்வகையில் திருப்பணிகள் மேற்கொண்டாலும் சிறப்போடு தலையாய நிலையில் அமைபவர்கள் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களேயாவார்.

அகஸ்தியரால் பிரதிஷ்டை செய்து வழிபட்ட அத்ரபூர்வம் மகாதேவம் என்ற லிங்கங்களை ஸ்ரீராமபிரான் பூஜித்து இலங்கைக்கு அணைகட்டிச் சென்றதாகத் தெரிகிறது.

இராவண சம்ஹாரம் முடிந்தபின்பு அகத்தியரின் ஆலோசனைப்படி பிரம்மஹத்தி தோஷம் நீங்க இராமேஸ்வரத்தில் சிவலிங்க பிரதிஷ்டை செய்து பூஜை செய்ய விரும்பினார்.

ஆஞ்சனேயரை காசிக்கு அனுப்பி சிவலிங்கம் கொண்டுவரச்சொன்னதும் ஆஞ்சனேயரும் காசிக்குச் சென்ருர். அங்கு பல லிங்கங்களைக் கண்ட அனுமன் சிறந்ததான லிங்கங்கள் எடுத்திட முடியாமல் மயங்கி நின்ருர்.

அப்போது லிங்கங்களில் கௌளி சப்தமிட்டுக் காட்டின. மேலும் கருடன் அவ்விரு லிங்கங்களின் மேலாக வட்டமிட்டுக்காட்டின. கவலை நீங்கி களிப்புடன் அவற்றை எடுத்தார்.

காசியின் காவல்தெய்வமான காலபைரவர் தன் அனுமதியின்றி எடுப்பதைத் தடுத்தார். இருவருக்கும் வாக்கு வாதங்களும் போரும்கூட நேர்ந்தது. இருப்பினும் அனுமன் இரு லிங்கங்களோடு இராமேஸ்வரம் சென்ருர்.

காலபைரவரின் கோபம் கௌளி மீதும், கருடன் மீதும் திரும்பியது. காசியின் எல்லைக்குள் கருடன் பறக்கக் கூடாது என்றும் சாபமிட்டார். இன்றும் காசிநகர எல்லைக்குள் கருடன் பறப்பதில்லை. கௌளி ஒலி கேட்பதில்லை.

காசியிலிருந்து அனுமன் சிவ லிங்கங்களைக் கொண்டு வருவதற்குள் லிங்கபிரதிஷ்டை செய்யும் காலம் நெருங்கிட அன்னை சீதாதேவி தன் திருக்கரங்களால் மணலால் லிங்கம் அமைத்தார். அந்த மணல் லிங்கத்திற்கு பூஜையும் தொடங்கப்பட்டுவிட்டது.

அனுமார் தான் லிங்கங்கள கொண்டு வருமுன் லிங்கப் பிரிதிஷ்டையும், பூஜையும் நடைபெற்றதைக் கண்டு மன வேதனைக் கொண்டார்.

ஸ்ரீராம பிரான் அனுமன் கொணர்ந்த லிங்கத்தை அவ்விடத்தே வைத்து மணல் லிங்கத்தை எடுத்துவிடக்கூறியதும், தனது விரலால் மணல் லிங்கத்தைப்பெயர்த்திட முயன்று தோல்வியே கண்டார்.

மணலால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கம் வேரோடி வலுவாகிவிட்டது. பிரதிஷ்டை செய்தது அன்னையல்லவா? அன்னையின் ஆலோசனைப்படி அருகே காசிலிங்கத்தையும் பிரதிஷ்டை செய்து அந்த லிங்கத்திற்கே முதல் பூஜை நடைபெற ஏற்பாடு செய்து அருள் பாலித்தார் அண்ணல் ராமர். இன்று வரை முதல் பூஜை, முதல் வழிபாடு காசி விஸ்வநாதருக்கும் அடுத்ததாக அன்னையால் உருவகப்படுத்திய லிங்கத்திற்கு பூஜை வழிபாடுகள் நடைபெறுவது குறிப்பிடத்தக்கது.

ஸ்ரீராமபிரான் பூஜை செய்த போது ஜோதி வடிவாகத் தோன்றி பிரம்மஹத்தி தோஷம் நீக்க உதவியதும் அறிந்ததே. அக்கோயிலில் விபீடணர் பூஜித்த ஜோதிர் லிங்கம் உளது. மேலும் கோயிலில் உள்ள ஏகாதச லிங்கங்களில் இறைவனின் ஜோதி ஸ்வரூபம் அமைந்துள்ளது.

இந்தியத்திருநாட்டில் பனிரெண்டு இடங்களில் ஜோர்திர் லிங்க ஸ்தலங்கள் அமைந்துளஎன. அதில் ஒன்று இராமேஸ்வரம். பனிரெண்டு ஜோதிர் லிங்கங்களையும் தரிசித்த புண்ணியம் ராமேஸ்வரத்தில் உள்ள லிங்கங்களை தரிசித்தாலே கிட்டும். ஏகாதச லிங்கங்கள் இறை ஜோதியின் அம்ஸங்கள் பெற்றவையல்லவா?

காசி விஸ்வநாதருக்கு வலதுபுரம் ராமநாதரும் அவருக்கு வலதுபுறம் அன்னை பர்வதவர்த்தனிதேவி நின்று அருள்பாலிக்கிருர். மதுரையில் சொக்கேசருக்கு வலது புறம் மீனாக்ஷி அமைந்தது போல இங்கும் அமைந்துள்ளது மிகச் சிறப்பாகும்.

அன்னை மனோன்மணி பீடத்தில் நான்கு கரங்களோடு நிற்கிருள். ஒருகரம் அபயம் அளிக்க மற்றொரு கரம் திருப்பாதங்களைச் சுட்டும், மற்ற இரு கரங்களில் தாமரை மலரும், அல்லி மலரும் ஏந்தியிருப்பதைக் காணலாம். இரண்டும் இரு கண்களுக் கருகில் தொடுநிலை போலமைந்திருக்கிறது.

"சுட்டும் விழிச்சுடர் தான்
கண்ணம்மா
சூரிய சந்திரரோ"

என பாரதி அன்னையின் இரு கண்களையும் சூரிய சந்திரனுக்கு ஒப்பிட்டதற்கேற்ப வெப்பமும், குளிர்ச்சியும் இருகண்களின் வாயிலாக அன்பர்கட்கு அருள்பாலிக்கும் கருணை விழிகளைக் கண்டானந்தம் கொண்ட பின் நம் கண்களை வேறு பக்கம் திருப்ப மனமே வராது.

ஸ்வர்ண பீடத்தில் நின்று வழிபடுவோர்க்கு சுகம்தர நிற்கும் நிலை அறிகிரேம். பீடம் ஸ்வர்ணத்தால் அமையுமாறு ஸ்ரீசிருங்கேறி ஜகத்குரு அவர்கள் வழிபடும் சாரதா பீட அனுக்கிரகத்தோடு முற்காலத்தில் தரப்பட்டதாகத் தெரிகிறது.

அம்மன் இருக்கும் அறையில் வடக்குச் சுவரில் ஒரு பிறையில் ஸ்ரீசக்கரம் ஒரு பீடத்தில் வைக்கப்பட்டுள்ளது. தூய தங்கத்தால் ஆன ஸ்வர்ண ஸ்ரீசக்கரமும் ஸ்ரீசிருங்ககிரி பீடாதிபதியால் வழங்கப்பட்டதாகவே அறிய முடிகிறது.

வாரந்தோறும் வெள்ளிக்கிழமை இரவு 8 மணிக்கு மேல் பர்வதவர்த்தனி அம்பாள் தங்கப் பல்லக்கில் மூன்ரும் பிரகாரத்தில் பவனி வந்து அருள் பாலிப்பது சிறப்பானதாகும். முகவை மாமன்னர் பாஸ்கர சேதுபதியான அம்பாள் திருவீதி உலாவிற்குத் தங்கப்பல்லக்குத் தந்ததாக அறிய முடிகிறது. சேதுபதி மன்னர் தங்கத்தீவட்டி ஏந்தி வந்தனர். இறையின் முன் மக்களும் மன்னனும் ஒன்றென விளக்கினர்.

ஸ்வர்ண ஸ்ரீசக்ரத்திற்கு தினமும் மதியம் அபிஷேகமும் பூஜையும் நடைபெறுகிறது. தவிர எல்லோரும் கண்டு இன்பம் பெற ஏதுவாக தமிழ் மாதக் கடைசி வெள்ளிக்கிழமையில் நவாபரண பூஜையும், 108 தீப பூஜையும் நடைபெறுவது காணவேண்டிய காட்சி. சுக்கிரவார மண்டபத்தில் நடைபெறும். இதைக் காணக் கண்கோடி வேண்டும்.

முதல், இரண்டாம் பிரஹாரங்களில் நடராஜர் சந்நிதிகள் இருந்தாலும் மிகப் பிரசித்தி பெற்ற மூன்றும் பிரஹாரத்தில் சபாபதி பெரிய அளவிலும் ஆனந்தமருளும் அற்புத நிலையில் உள்ளதையும் காணும்போது தெய்வீக ஆற்றல் நம்மை ஈர்க்கின்றது.

சபாபதியின் வாயிலில் மாமுனிவர்களான பதஞ்சலி, வியாக்ரபாதர் இறையை வணங்கியபடி நிற்கிருர்கள். சபாபதி நடன கோலத்திருமேனிக்குப் பின்புறம் ஸ்ரீபதஞ்சலி முனிவரின் ஜீவ சமாதியுள்ளது. நடராஜரை பிரகாரத்தில் சுற்றும்போது பதஞ்சலியாரின் நல்லருளும் கிடைக்கும்படி அமையப் பெற்றுள்ளது. விசேஷமாகும்.

காசி விசாலாட்சி அம்மையார் சந்நிதியும் விஸ்வநாதரைப் பார்த்தபடி தெற்கு நோக்கித் தனிச்சந்நிதியாக இருக்கிறது. அன்னையின் அருள் தோற்றம் ஆனந்த இன்ப லயிப்பை ஊட்டவல்லது.

மூலஸ்தானங்களின் பிரதம அர்ச்சகர்களாக மகாராட்டிர அர்ச்சகர்கள் இருப்பதைக் காணலாம். ஸ்ரீசிருங்ககிரி மடத்தின் ஜகத்குரு ஸ்ரீசங்கராச்சார்யார் அவர்களது ஆசி வழங்கப்பட்டவர்களே பிரதான அர்ச்சகர்களாக வரமுடியும். இந்த நியதி இன்றுவரை பின்பற்றப்படுகிறது.

அம்மன் சந்நிதிக்குப் பின்புறம், ஸ்ரீராமரின் யோகசயனம் காணலாம். அங்கு ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி, ஆஞ்சநேயர் போன்ருேர் நிற்க, சுவாமியின் யோக சயனம் ஆனந்தமாக அமைந்திருப்பதைக் காணலாம். விண்ணுேக்கிய மல்லார்ந்த சயனம், கொப்பூளில் பிரம்மா கிடையாது. இதுபோல யோக சயனம் நேபாளத்தில் "காட்மாண்"டில் மட்டுமே காணமுடியும்.

திருக்கல்யாண மண்டபம் பெரிதேயாயினும் தற்காலத்தில் அம்மாள் திருக்கல்யாணம் கண்டுகளிக்கக் கூட்டம் மிக அதிகமாக வருவதால் இடநெருக்கடி ஏற்படுவதைத் தவிர்க்க, தொலைக்காட்சிப் பெட்டிகள் மூலம் பலரும் கண்டு களிக்க வசதி செய்யப்படுகிறது.

இக்கல்யாண மண்டபத்தூண்களில் சேதுபதி மன்னர்கள் திருஉருவங்கள் நின்று திருமணத்தைக் கண்டு களிப்பதாக அமைந்துள்ளது.

திருக்கல்யாண மண்டபத்தை அடுத்து உள்ளே நுழையும் அம்மன் சந்நிதிக்கு முன்புறமுள்ள நுழைவாயிலின் மேலே யானைத்தந்தங்கள் இரண்டும் ஒன்றினை ஒன்று தொடுவது போல அமைந்துள்ளன.

முன்னர் இக்கோயில் பராமரிப்பில் இருந்த யானை இறையருள் பெற்றபின் மிகப்பெரிய அளவிலான இரு தந்தங்களும் அம்மன் சந்நிதி முகப்பில் அழகுபடுத்துவதோடு நம்மை "இரு கரம் குவித்து உள்ளே வருக" எனக்கூறுவது போல் அமைந்துள்ளது. வேறு எங்கும் இதுபோல் காண்பது அரிது.

இதே மண்டபத்தில் பதினான்கு தூண்கள் உள்ளன. அவற்றில் இரு தூண்களில் சேதுபதி மன்னர் மற்றும் இளையவர் கடம்பத்தேவர் உள்ளனர். மற்றும் ஓவியமாக ஆதிலெட்சுமி, சந்தானலெட்சுமி, கஜலெட்சுமி, தனலெட்சுமி, தானிய லெட்சுமி, ஜெயலெட்சுமி, ஈஸ்வரலெட்சுமி, வீரலெட்சுமி கிழக்கு நோக்கி காணப்படுகின்றன. தூண்களில் மேலும் வடபுறமுள்ளவற்றில் மனோன்மணி, மகேந்திரி கௌமாரி, ராஜராஜேஸ்வரி, லட்சுமி, காளி, சாமுண்டி, துவார பாலிகை திருவுருவங்களும், தெற்குப்பக்கமுள்ள எட்டுத் தூண்களில் துவாரபாலிகை, சிவதுர்க்கை, மனோன்மணி, வாகீஸ்வரி, புவனேஸ்வரி, அன்னபூரணி ஆகிய திருவுருவங்கள் நேரில் நின்று பேசுவதுபோல அருளாசி வழங்கும் நிலையிலமைந்த அற்புதச் சிலைவடிவங்களாகும். நவசக்தி மண்டபத்தில் நலமருளும் தெய்வீக வடிவங்கள் நம்மை ஈர்ப்பதை நேரில் உணரலாமே தவிர சொல்வது கடினம்.

பாரதநாட்டில் ஐம்பத்தைந்து சக்திபீடங்களில் இராமேஸ்வர ஸ்தலமும் ஒன்ருகும்.

பர்வதராஜனும் அவனது மனைவி "மேனா"வும் இறையம்ஸம் கூடிய பெண் மகவு வேண்டி தவமியற்றினர்.

கேதகீ வன (தாழைவன)த்தில் ஒரு தாழைச் செடியடியில் பெண்குழந்தையைக் கண்டெடுத்த பர்வதராஜன் - மேனா தம்பதியர் பர்வத வர்த்தனி என்ற பெயரிட்டு வளர்த்தனர்.

சிவபக்தி, சிவதியானம் கொண்டு விளங்கிய பர்வத வர்த்தனி பருவ வயதடைந்திட பெற்ருேர் தக்கதோர் வரண் தேடத்தொடங்கினர்.

சிவன் பால் தன் சிந்தையுள்ளதை தந்தைக்குத் தெரியப்படுத்தி கன்னிமாடம் ஏற்படுத்

தித்தரச் செய்து சிவசிந்தையில் சிறந்திருந்தாள்.

ஒருநாள் கிழவேதியர் கன்னிமாடம் வரவும், மலைவளர் காதலி உமையும் வரவேற்று உபசரித்தாள். சிவனைப் பற்றி மிகவும் தரக்குறைவாகப் பேசினார். சினத்தால் கிழவரை நிந்தித்தாள்.

வேதியராய் வந்த சிவபெருமானும் தன் உண்மையுருவைக் காட்டி முறையாக மணப்பதாக வாக்களித்து மறைந்தார்.

நாரதர் மூலம் பெண் கேட்டு திருமண ஏற்பாடு நடைபெற்றது. தக்ஷப்பிரஜாபதியின் கொள்ளுப் பேத்தியும், ஹிமவானின் பேத்தியும், பர்வதராஜனின் புத்ரியுமான மலைவளர் காதலி என்ற பர்வத வர்த்தனிக்கும் அகில உலக நாயகன் ஈஸ்வரனுக்கும் சிராவண சுத்தம் பஞ்சமியும் ஹஸ்த நட்சத்திரமும் கூடிய நாளில் (ஜூலை (அ) ஆகஸ்டு) திருமணம் நடந்தது.

இதை அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொராண்டும் பர்வத வர்த்தனி-ஈஸ்வரன் திருமணத்தை சிறப்பாகக் கோயிலில் விழாவாக நடத்தப்படுகிறது.

கோயிலுள்ளே கல்யாண சுந்தரர் கௌரியின் திருவுருவங்கள் உள்ள மண்டபத்தில் பீடத்தில் கிழக்கு நோக்கிய நிலையில் கல்யாண சுந்தரர், அவரது வலதுபுறம் கௌரியும் நிற்கிறார்கள்.

கௌரிக்கு வலதுபுறம் பீடமின்றி, லெட்சுமி தேவியானவள் மணப்பெண்ணின் தோழியாக நிற்கிறாள்.

வடக்குப் பார்த்த நிலையில் திருமாலும பிருமமாவும் நிற்க முன்னால் அகனி உள்ளது. இவ்விடததில பிரார்த்தனை செய்து கொள்ள கன்னிப்பெண்களுக்குத் திருமணம் நடைபெறுவதாகக் கூறுவர்.

கல்யாண மண்டபத்தின் பககமாக அனுப்பு மண்டபத்தின் இடதுபுறம் ஸ்ரீமகாலட்சுமி சந்நிதியுள்ளது. குபேரனின் இயந்திர ஸ்தாபிதம் செய்யப்பட்ட மகாலெட்சுமியாதலால் சக்தி மிக்கதாக, வறுமை நீக்கி வளம் தரும் தேவியாக விளங்குகின்றதை அறியலாம்.

அன்னையின் அருள் சந்நிதிக்கு எதிரில் மஹாலெட்சுமி தீர்த்தக்குளம் உள்ளது. இந்த தீர்த்தத்தில் (கோயில் தீர்த்தங்களுக்குள்) முதலில் நீராடி கோயிலுள் மற்ற தீர்த்தங்களில் நீராடி கோடி தீர்த்தத்தில் தீர்த்தமாடுதலை நிறைவு செய்தல் வேண்டும். கோயிலுள்ளே மொத்தம் 22 தீர்த்தங்கள் குளவடிவிலும் கிணறு வடிவிலும் உள்ளன.

பாதாள கங்கையாக வந்து பூமிமீது பீரிட்டெழுந்து அன்னையால் உருவாக்கி அன்னலால் பூஜிக்கும் லிங்கத்திற்கு கங்கை திருமஞ்சன மாட்டியதால் இங்கு பாதாள கங்கை கிணற்றுள் இருப்பதும், தினசரி அபிஷேகத்திற்குப் பயன் படுத்தப் படுவதும் அறிய முடிகின்றது.

கேதகீவனமாக இருந்த இடமாதலால் அன்னை அவதரித்த தாழைவனமாதலால் அன்னைக்குத் தாழம்பூ எப்போதும் சாற்றலாம். சுவாமிக்கு மகா சிவராத்திரி மற்றும் ஆருத்ரா தரிசன காலங்களில் மட்டும் தாழம்பூ சாற்றுதல் நடைபெறும்.

அம்பாள் சந்நிதி வாயிலில் தெற்குப் பக்கம் திருமலை சேதுபதி மற்றும் அவரது மகன் ரகுநாத சேதுபதி ஆகியோரது திருவுருவங்கள் (சிலைகள்) உள்ளன. ஒவ்வொரு வெள்ளிக கிழமை இரவும் மாலை சூட்டி மரியாதை செய்யப்படுகின்றது.

அம்பாள் கோயிலுக்குள் வடகிழககு மூலையில் பள்ளியறை உள்ளது. தினந்தோறும் இராமநாதர் சந்நிதியிலிருநது ராமநாதர் தங்க விக்ரஹம் இங்கு எழுந்தருளப்பெறும். பளளியறை ஊஞ்சலில் அம்மனின் தங்க விக்ரஹத்தின் அருகில் வைக்கப் பட்டு சயன பூஜை நடைபெறும்.

மறுநாள் காலை திருப்பள்ளி எழுச்சி நடைபெறும். சுவாமி சந்நிதானத்திற்கு எழுந்தருளச் செய்வார்கள்.

பள்ளியறை தீபாராதனைக்கும் அடுத்து சிருங்ககிரி ஜகத குருவால் வழங்கப்பட்ட ஸ்படிக லிங்க தீபாராதனையைக் காணவும் வரிசையில் மக்கள் இருப்பது அன்றுட நிகழ்ச்சியாகும்.

கிழக்குக்கோபுர நுழைவாயிலில் ஸ்ரீஆஞ்சனேயர் நிற்கிறார். தரைமட்டத்திலிருந்து மேலே எட்டடியும், தரைமட்டத்தின் கீழே எட்டடியுமாக நின்று அருள்பாலிக்கின்றார். அவரது சந்நிதியைச் சுற்றும் போது அவர்கொண்டுவந்த காசிலிங்கங்களில் மற்றொன்றைக் கண்டு தரிசிக்கலாம.

திருநாவுக்கரசர் திரு இராமேஸ்வரம் வந்தபோது ஸ்தலம் முழுவதும் லிங்கங்களாக அவ

ருக்குத் தோற்றமளிக்க பாம்ப னில் இருந்தே பதிகம் பாடிய தாகக் கூறுவர்.

இராமேஸ்வரம் தீவில் எருது கள் கொண்டு உழுவதில்லை. எருதுகளால் செயல்படுத்தும் எண்ணெய் ஆட்டும் செக்கு களும் கிடையாது என்பதும் குறிப்பிடத்தகுந்தது.

சைவ வைணவ, பேதமின்றி, எல்லோரும் வழிபட்டுப் பேரருள் பெற உதவும் ஸ்தலத்தைப் போற்றிப் பணிந்து, நற்பேறு பெற்ற ஒருமைப்பாடு விளங்க வாழ்க வையகம் வாழ்க் வள முடன் என வாழ்த்துவம்.

***

## நாரதர் சாபம்

பஞ்சஜனனின் புத்ரியான அஸிக்னீ என்பவளை தக்ஷப்ராஜாபதி விவாஹம் செய்து கொண்டு, விஷ்ணுவின் மாயையினால் மோஹம் கொண்டு அவர்மூலம் 'ஹரீயச்வர்கள்' என்ற பதினாயிரம் புத்ரர்களை உண்டாக்கினான். அந்த புத்ரர்கள் மிகுந்த தெய்வபக்திக் கொண்டவர்களாய், தன் தந்தையின் உபதேஸப்படி ப்ராஜா சிருஷ்டியின் பொருட்டு மேற்கு திக்கை நோக்கி போனார்கள்.

அவ்வாறு சென்றவர்கள் 'நாராயண சரஸ்' என்ற ஒரு புண்ணிய தீர்த்தத்தை அடைந்தார்கள். அது ஒரு நதி, சமுத்திரத்தில் சங்கமமாகும் இடம். அதில் தீர்த்தமாடியவுடன் அவர்களுக்கு மோக்ஷ ஸாதனத்தைத் தேடிச் செல்லும் பக்குவநிலை அவர்களுக்கு ஏற்பட்டது. (நாராயண ஸரஸ் என்ற தீர்த்தம், தற்சமயம் குருவாயூரில் உள்ள பெரிய தடாகமாகும்) நாரத பகவானும் அவர்களுக்கு மோக்ஷமார்க்கத்தை உபதேசித்தார். அதை வெளிப்படையாக உபதேசிக்காமல் மறைபொருளாகவே செய்தார்.

இதனைக் கேள்விப்பட்ட தக்ஷன், தன் புத்திரர்கள் தன்னுடைய கட்டளையை நிறைவேற்ற வில்லையே என்று வருத்தம் அடைந்து, மறுபடியும் அஸிக்னி மூலம் 'சபளாச்வர்கள்' என்ற ஆயிரம் பிள்ளைகளை உண்டாக்குகிறான். பிறகு தன் தகப்பனாரிடமிருந்த கட்டளைப்படி அந்த ஆயிரம் சபளாச்வரர்கள் மேற்கு நோக்கி ப்ரஜா சிருஷ்டிக்காக கிளம்பினார்கள். அவர்களும் நாராயண சரஸ்ஸில் குளித்து, மோக்ஷத்திற்கு உகுந்த துறவியாகிவிட்டார்கள். இதனைக் கேள்விப்பட்ட தக்ஷ ப்ரஜாபதி நாரதர் தான் இவ்வாறு செய்தார் என்று எண்ணி கோபம் அடைந்து,

**"தந்துக்குந்தன யன்னஸ்த்வம் பத்ர சேர: புன: ।**
**தஸ்மால்லோகேஷு தே மூட ந பவேத் ப்ரமத: பதம் ॥**

(நாராயணீயம்)

என்று நாரதரை சபித்து விடுகிறார்.

அதாவது "ஸந்தானத்தை (புத்ர அபிவிருத்தியைக்) கெடுத்தவனே! எந்தக் காரணத்தால் நீ எங்களுடைய குழந்தைகளுக்கு முதல் தடவை செய்ததோடு நில்லாமல் இரண்டாவது தடவையும் அமங்களத்தை (துறவிகளாகும்படி) செய்தாயோ, அந்தக் காரணத்தால் ஹே! மூடனே! உனக்கு உலகத்தில் ஒரிடத்திலும் நிலைத்த வாஸம் ஏற்படாமல், சுற்றிக்கொண்டே இருக்கும் தன்மை ஏற்படக்கடவது என்று தக்ஷன் நாரத பகவானை சபித்தான்.

இதனால் ஒரு முகூர்த்த காலத்திற்கு மேல் ஒரே இடத்தில் நாரதர் இருந்து விட்டால் சாபம் காரணமாக அவர் தலைசிதறி வெடித்துவிடும்.

அதனால் அவர் திரிலோக சஞ்சாரி மட்டும் அல்ல. ஈரேழு பதினான்கு லோகங்களுக் கும் சென்றுவிட்டு அங்கு நாராயண மந்திரத்தை ஜபித்து, பரவும்படி (பக்தி மார்க்கத்தை) செய்துகொண்டிருப்பார்.

தொகுப்பு: என்.சி. கோபாலன் - சென்னை.

# புள்ளிருக்குவேளூர்-வைத்தீஸ்வரன்கோயில்

திரு.என். ராமகிருஷ்ண - மயிலாடுதுறை.

இன்பம் பெறவேண்டும். துன்பம் நீங்க வேண்டும் என்று எண்ணுவார் எங்கும் உண்டு. துன்ப நீக்கமும், இன்பப்பேறும் வேண்டும் என்று தவம் கிடக்கும் மக்கள் எண்ணற்றோர். அவர்களது பிரார்த்தனை வீண்போகாது. அவர்களது உள்ளம் கலந்த குரல் இறைவன் திருச்செவிகளில் விழும். அவர்களது வாழ்வு நலம் பெறும். அவ்வாறு அருள் சுரக்கும் அருள் தானங்கள் தான் பிரார்த்தனை தலங்கள் எனப்பெறும். வேளூர் எனப் பெறும் வைத்தீஸ்வரன்கோயில் இத்தகைய சிறந்த பிரார்த்தனை தலம். தருமையாதீனத்தின் அருளாட்சிக்குட்பட்ட இருபத்தேழு திருக்கோயில்களுள் இது முதன்மையானது.

## புள்ளிருக்குவேளூர் :

புள்-சடாயு என்ற பறவையும், இருக்கு-இருக்கு என்ற வேதமும், வேள்- முருகப்பெருமானும், ஊர்-சூரியனும் இறைவனை வழிபட்டு அருள்பெற்ற காரணத்தால் இத்தலப்பெயர் புள்ளிருக்கு வேளூர் எனப்பெற்றது. திருஞானசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள் ஆகியோர் தம் தேவார பாடல்களைப்பெற்ற சிறப்புடையது.

## வைத்தியநாதர் :

இறைவன் 4448 நோய்களைத் தீர்க்க திருவுளங்கொண்டு தையல்நாயகி தைல பாத்திரமும், சஞ்சீவியும், வில்வமரத்தடி மண்ணும் உடன்கொண்டு வர இத்தலத்தில் எழுந்தருளி தீரா நோய் தீர்த்தருளி வருகின்றீர் என்பது புராண வரலாறு. முருகப்பெருமான் இறைவனை வழிபட்டு, சூரனை அழிக்க வேல் வாங்கிய தலம். இராமன் வழிபட்டு அருள் நலமுற்ற தலம். இத்தலப் பெருமாள்மேல் சார்த்தி அளிக்கும் திருச்சாந்துருண்டை உடற்பிணி, உயிர்ப் பிணிகளைப் போக்கும் ஆற்றலுடையது. இறைவன் வைத்தியநாதர்.



## தையல் நாயகி :

இது தையல்நாயகி சந்நிதி. அதோ அருள் ததும்பும் அந்த திருமுகத்தை பாருங்கள். கருணை வழியும் திருக் கண்களை நோக்குங்கள். அபய ஹஸ்த்தம், வரத ஹஸ்த்தங்களுடன் கைகளில் சக்கரம், சங்கு தாங்கி வருவோர்க்கு அன்பு காட்டும் பராசக்தியினால் இப்பெருமாட்டி இங்கு பெருமானை வழிபட்டதால் இத்தலத்திற்கு அம்பிகாபுரம் என்ற பெயர் வழங்குகிறது. தையல்நாயகி கோயிலுக்கு போகிறேன் என்றே எளிய மக்கள் இத்தலத்தை பேசிட அருள்பவர் இவ்வம்மை. பேய், பிசாசு பிடிக்கப்பட்டு பெருந்துன்பமடைபவர் இந்தப் பிராட்டி திருக்கண் நோக்கால் விடுதலைபெற்று இன்புறுவர். அன்பர்கள் தரும் காணிக்கைகள் பணமோ, உப்போ, மிளகோ, வெள்ளி விழிகளோ, கைகளோ எவையோ அனைத்தையும் ஏற்று அருள் வழங்கும் பேரருளாட்டி இத்தையல்நாயகி.

## செல்வமுத்துக்குமாரர் :

அருளின் கொழுந்தாய், அழகின் பிழம்பாய், கருணையின் கடலாய், இதோ எழுந்தருளியிருப்பவன் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரப்பெருமான். வள்ளி தெய்வானை அம்மையாருடன் உலகைக்காக்கும் அருட்குறிப்போடு வேல்தாங்கி நிற்கிறான் பெருமான். அருள் வழியும் திருமுகம், புன்னகை தவழும் செவ்வாய், அஞ்சாதே என்று அபயம் காட்டும் திருக்கரம், சுற்றி நில்லாதே போ, பகையே துள்ளி வருகுது வேல் என்று ஆனந்த பரவசத்துடன் பாடி மகிழ்ந்திட வேல் பிடித்து நிற்கின்றான் ஐயன்.

நாடோறும் முத்துக்குமரனுக்கு நடைபெறும் அர்த்தஜாம

பூசை "புழுக்காப்பு" எனப்பெறும் சந்தனப்பிடி முத்துக்குமாரன் திருவடிகளில் சாத்தப்பெறும் இந்த நேத்திரப்பிடி சந்தனமும் திருநீறும் இப்பெருமானது திருவருட்பிரசாதங்கள் இவை நோய் நீக்கும் நலம் உடையவை.

### அங்காரகன் :

அங்காரகன் வழிபட்டு அருள் பெற்ற காரணத்தால் இத்தலம் நவக்கிரஹ க்ஷேத்திரங்களில் அங்காரக க்ஷேத்திரமாகும். வாரந்தோறும் செவ்வாய் கிழமைகளில் அன்பர்கள் அங்காரகனை வழிபட்டு இடர் நீங்குவர். தனி வெள்ளி விமானத்தில் அங்காரகனின் உற்சவத் திருவுருவம் சுவாமி சந்நிதிக்கு அருகில் விளங்குகிறது. ஆட்டு வாகனத்தில் பிரகாரத்தை வலம் வருவார்.



### சித்தாமிர்தத் தீர்த்தம் :

சித்தாமிர்தத் தீர்த்தம் இத்தலத்தின் விழுமிய தீர்த்தம். சித்தர்கள் இறைவனுக்கு அபிஷேகம் செய்த அமிர்தம் இந்த தீர்த்தத்தில் கலந்திருப்பதால் இதை சித்தாமிர்தத் திர்த்தம் என வழங்குவது மரபு. கோக்ஷுர தீர்த்தம், இக்ஷுசார தீர்த்தம்., சடாயு தீர்த்தம் என்று யுகங்கள் தோறும் இது வழங்கப்பெற்று வந்தது என தலபுராணம் கூறுகிறது. சதானந்த முனிவர் என்பவர் சாபத்தால் இந்த் தீர்த்ததில் தவளை, பாம்பு முதலியவை இல்லை. இந்த தீர்த்தத்தின் நீர்த்திவலை ஒன்றே பெரும் பிணிகளை போக்கும் என்று முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ் பாடுகிறது.

### தலவிருக்ஷம்-வேம்படிமால்:

தழைத்து நிற்கும் இந்த வேம்பு தலவிருட்சம் படர்ந்து விரிந்த. இந்த வேம்பு நிழலில் ஆதி வைத்தியநாதர் வீற்றிருக்கிறார். "வேம்படிமால்" என்று இந்த இடம் கூறப்படுகிறது கீழைக்கோபுர வாயிலில் உள்ளது. இது சிறந்த மூலிகையாக விளங்குவது. தலபுராணத்தில் இவ்வேம்பு பலவாறு புகழப்பட்டுள்ளது. வாழ்வின் கசப்புகளை போக்கும் இனிப்புப பிழம்பாக இருக்கும் இறைவன், தீரா நோய் தீர்த்தருள வல்லவனாக, மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகி வேம்படியில் வீற்றிருப்பது புதுமையாக இல்லையா?

### சடாயு குண்டம் :

இத்தலத்தில் உள்ள பழமையான சிறப்புக்களில் சடாயுகுண்டம் குறிப்பிடத்தக்கது. இத்தலத்தில் சம்பாதி, சடாயு என்ற கழுகரசர்கள் இறைவனை வழிபட்டு அருள் பெற்றுள்ளனர். "சம்பாதி சடாயு என்பார் தாமிகுவர் புள்ளானார்க்கு அரையன இடம் புள்ளிருக்கு வேளூரே" என்பது இத் தேவாரம்.

சடாயுகுண்டம், சடாயுவின் வேண்டுகோட்படி இராமபிரான் இத்தலத்தில் (விபூதி குண்டத்தில்) சிதையடுக்கிச் சடாயுவின் உடலை வைத்து தகனம் செய்



ததினால் இவ்விடம் ஜடாயு குண்டம் எனப்பட்டது. வீரசேனன் என்ற அரசன் க்ஷயரோகத்தினால் பீடிக்கப்பெற்ற சித்திர சேனன் என்ற தன் மகனுடன் இத்தலத்திற்கு வந்து நீராடி இக்குண்டத்திற்கு அதிரசம், வடை, முதலியன நிவேதனம் செய்து, வேதிகையையும் பொன்னால் திருப்பணி செய்து குண்டத்திலுள்ள நீற்றை அள்ளி எடுத்து தானும் அணிந்து, தன் புதல்வனுக்கும் அணிவித்து நோய் நீங்கப்பெற்று நலமுற்றான்.

இத்தலத்தில் தையல்நாயகி அன்பில்லம் சித்த வைத்திய சாலை முதலியன உள. தமிழ் நாட்டின் பழமையான மருத்துவக்கலை சித்த மருத்துவம். அதிலும் பதினெண் சித்தர்களில் ஒருவரான தன்வந்திரி என்ற சித்தர் தலம் பெருக்கிய இத்தலத்தில் இவ்வைத்தியசாலை தொடங்கப்பட்டது. கோயிலில் தன்வந்திரி உருவம் உள்ளது.

இத்தலத்தில் கிருத்திகை விழா ஒவ்வொரு மாதமும் சிறப்பாக நடைபெறுகின்றது. லட்டு, சந்தனக்குழம்பு, பிரசாதங்கள் சிறப்பானவை. இச்சந்தனக் குழம்பு பல மாதங்கள் வீணாவதில்லை. சந்தனகுழம்பு அபிஷேகம், அர்ச்சனைகள் செல்வமுத்துக்குமரனுக்கு செய்யப்படுகின்றன. நவரத்ன அங்கி அலங்காரம், வைர வேலுடன் கண் கொள்ளா காட்சியாக இருக்கும். பங்குனி உத்திர விழாவும் சிறப்பாக நடைபெறுகின்றது.

### கல்வெட்டுகள் :

இக்கோவிலில் சோழ, பாண்டிய, நாயக்கர் கால கல்வெட்டுகள் பல உள்ளன.

### அன்பர்கள் :

திருஞானசம்பந்தர், அப்பர் சுவாமிகள், அருணகிரிநாதர், வடுகநாத தேசிகர், சிவஞான தேசிகர், குமரகுருபர சுவாமிகள், படிக்காசு தம்பிரான், சிதம்பர முனிவர் காளமேகபுலவர், ராமலிங்க சுவாமிகள், ஆதீன கட்டளை தம்பிரான்கள் என் பலர் பாடியுள்ளார்கள்.

### திருப்பணிகள் :

வினைதீர்த்தான் கோயில் விளக்கழகு என்பது பழமொழி இங்கு பல பிரம்மாண்டமான வெள்ளி, வெங்கல விளக்குகள் உள. கயிலைக்குருமணிகாலத்தில் பல திருப்பணிகள் செய்யப்பட்டு 1969-ல் மகாகும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது.

### திருவிழாக்கள் :

பிரமோற்சவம் பங்குனி திங்களில் நடைபெறும். செல்வ முத்துக்குமரனுக்கு தை மாதம் திருவிழா நடைபெறும். அம்மையாருக்கு நவராத்திரி ஆடிப்பூர விழாக்கள் உண்டு.

சில பல்லவ சிற்பங்களும் யாளிகளும் தூண்களில் காணப்படுகின்றன. மண்டபங்கள் எட்டு உள. தீரத்தங்கள் ஆறு உள. பல அறக்கட்டளைகளைப் பற்றிய விவரம் தேவஸ்தானத்தில் அறியலாம். சுற்றுக்கோயில்கள் பல உள. முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் பத்துப்பாடல்கள் கொண்டது. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் இயற்றியது.

வைத்தீஸ்வரன் கோவில் செல்ல புகைவண்டி வசதி, மற்றும் பஸ் வசதிகள் உண்டு. இங்கு நடைபெறும் கிருத்திகை விழா பிரசாத சந்தனகுழம்பு, மறுதினம் சென்னை பிரசார நிலையத்தில் அன்பர்களுக்கு வழங்கப்படுகின்றது. தருமபுர ஆதீன வேளூர் தேவஸ்தான பிரசார நிலையம் சென்னை தியாக ராஜ நகரில் உளது. இங்கு ஒரு நூலகமும் சைவ சம்பந்த நூல்களும் உள்ளன.

## விண்ணப்பம்

**'ஸப்தகிரி'யில் வெளியிடப்படும் சமயச் சார்பான கட்டுரைகளுக்கு அளிக்கப்படும் சன்மானத்தொகை கணிசமாக உயர்ந்தப் பட்டுள்ளது. ஆகவே கட்டுரையாசிரியர்கள் தொடர்ந்து தங்கள் முழு ஒத்துழைப்பினை நல்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.**

**--ஆசிரியர்.**

(தொடர் கட்டுரை)

# ஸ்ரீ ராமானுஜர்

திரு. மா. சீதாராமன் - காஞ்சிபுரம்.

## கண்பெற்றார் கூரேசர்!

திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருந்த இராமாநுசர் கூரத்தாழ்வாரின் நினைவாகவே 'இருந்தார். அப்போது திருவரங்கத்திலிருந்து அங்கு வந்த வைணவர் ஒருவர் சோழன் சபையில் நிகழ்ந்தவற்றையும், கூரத்தாழ்வாருக்கும் பெரியநம்பிக்கும் ஏற்பட்ட இன்னல்களையும் விளக்கமாக இராமாநுசருக்குக் கூறினார். இதுகேட்டு இராமாநுசர் பெரிதும் நொந்தார்.

மாருதிச் சிறியாண்டான் என்னும் அடியவரைத் திருவரங்கத்துக்கு அனுப்பி, கூரேசருக்கும் மற்றுமுள்ளோருக்கும் தம் மனநிலையைக் கூறித் திருவரங்கத்துச் செய்திகளையெல்லாம் தெளிவாக அறிந்துவருமாறு அருளிச்செய்தார். அவரும் திருவரங்கம் சென்று சோழன் புழுத்துமாண்ட செய்தி முதல் அனைத்தையும் விரிவாக அறிந்து வந்து திருநாராயணபுரத்திலுள்ள எம்பெருமானார்க்குப் பணிந்து கூறினார். இது கேட்டு எம்பெருமானார் அமைதியும் ஆனந்தமும் கொண்டார்.

சோழ மன்னனது கொடுமையால் கண்களை இழந்த கூரேசர் தம் மனைவியுடனும் புறப்பட்டுத் திருவரங்கத்திலிருந்தும் திருமாலிருஞ்சோலைக்குச் சென்று சிலகாலம் அங்குத் தங்கியிருந்தார். அங்குத் தங்கியிருந்த காலத்தில் ஸ்ரீ ஸ்தவம், சுந்தர பாஹூஸ்தவம், அதிமானுஷஸ்தவம், வைகுண்ட ஸ்தவம் முதலான தோத்திர நூல்கள் பலவற்றை இயற்றியருளினார்.

மாருதிச் சிறியாண்டான் மூலம் கூரேசர் நிலையக். கேட்டறிந்த இராமாநுசர் கூரேசரின் கண்கள் திரும்பப் பெறும் உபா



யம் பற்றிச் சிந்தித்தார். தம் பகைவர்களுக்கும் நலமே செய்யும் கூரேசரின் கருணை நெஞ்சத்தை எண்ணி மனங்கசிந்தார். இழந்துவிட்ட கண்களை பெறுவதற்குரிய உபாயம் ஒன்றைத் தம் சீடர் ஒருவர் மூலம் சொல்லியனுப்பினார்.

தம்மைக் காப்பாற்றும் பொருட்டுத் தம் உயிரையும் துச்சமெனக் கருதித் தம் கண்களை இழந்த நிலையிலும் தம்பால் அன்பும் பக்தியும் கொண்டு வாழும் கூரேசரை வரதராசப் பெருமாள் சந்நிதி சென்று அப்பெருமான் அருளால் கண் களைப் பெறுமாறு இராமாநுசர் செய்தி அனுப்பினார்.

இச்செய்தியைக் கேள்வியுற்ற கூரேசர் எண்ணிலாக் கருணை உள்ளம் படைத்த இராமாநுசரின் நிறையன்பை எண்ணி நெஞ்சம் உருகினார். அவரின் அருளாணைப்படியே திருமாலிருஞ்சோலையிலிருந்தும் புறப்பட்டுக் காஞ்சியை வந்தடைந்தார். அருளாளப் பெருமானான வரதராசப்பெருமான் சந்நிதி முன் நின்று மனமுருகி வழிபட்டார்.

கூரேசரின் நெஞ்சார்ந்த வழிபாட்டுக்கு இரங்கிப் பெருமாள் அருள்மொழி பகர்ந்தார்.

"அன்பனே! உன் ஆசார்யர் பொருட்டே நீ உன் இரண்டு கண்களையும் இழந்து நின்றாய்! உன் ஆசார்ய பக்தி அனைவராலும் பின்பற்றத்தக்கதே!

உன்போன்ற உண்மையான அடியார்களுக்கு அருளும் பொருட்டே நான் இம்மண்ணுலகில் அர்ச்சாவதார மூர்த்தியாக எழுந்து அருள்பாலித்து வருகிறேன்! ஞானக்கண் பெற்றுச் சிறந்து விளங்கும் உனக்கு ஊனக்கண்கள் இரண்டும் இப்பொழுது முதலே ஒளி வீசத் தொடங்கும்! பக்தர்களில்லாமல் பகவானுக்குச் சிறப்பில்லை. உன்போன்ற பக்தர்களாலேயே ஆசார்யருக்கும் ஆண்டவனுக்கும் பெருமை கூடுகிறது. எனவே, நீ நினைக்கும் படியே அனைத்தும் நடக்

கும்!" என்று பெருமாள் திரு வாய் மலர்ந்தார்.

அருளாளப் பெருமாளின் அளப்பெருங் கருணையை எண்ணிக் கூரேசர் வியந்தார். அவருடைய கண்கள் ஞான ஒளியை வீசத்தொடங்கின. கூரேசர் ஆனந்த மிகுதியால் பரமனின் புகழ்பாடிக் கூத்தாடத் தொடங்கி விட்டார்.

கடலனைய தம் செல்வத்தைத் துச்சமெனத் துறந்து, கல்விக் கடலென ஞானத்தால் நிறைந்து, கைப்பிடித்த நாயகியுடன் கடைசி வரை இல்லறம் புரிந்து, கடவுளெனத் தன் ஆசார்யனை மதித்து அவர் தம் நலம் காக்கத் தம் கண்களையே துறந்து, அந்த ஆசார்யரின் ஆக்ஞைப்படியே அருளாளப்பெருமாளை வழிபட்டு அகக் கண்ணே போல் புறக் கண்களும் ஒளிவீசப் பெற்று உயர்ந்து நிற்கும் கூரேசரைக் கண்டோர் அனைவரும் கைகூப்பி வணங்கி அவர் புகழ் பாடித் துதிக்க ஆரம்பித்துவிட்டனர்.

## திருவரங்கத் திருப்பணி!

திருநாராயணபுரத்திலிருந்து தம் சீடர்களுடன் திருவரங்கம் நோக்கிப் பயணமானார் இராமாநுசர். வழியில் மதுரைக்கு அருகேயுள்ள திருமாலிருஞ்சோலை என்னும் திருத்தலத்தே சிறிது காலம் தங்கினார். திருமாலிருஞ்சோலை பற்றிய ஸ்ரீஆண்டாள் பாசுரம் ஒன்று அப்போது அவரின் நினைவுக்கு வந்தது.

"நாறு நறும்பொழில் மாலிருஞ்
சோலை நம்பிக்குநான்
நூறு தடாவில் வெண்ணெய்வாய்
நேர்ந்து பராவிவைத்தேன்
நூறு தடா நிறைந்த அக்கார
அடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையான் இன்றுவந்து
இவை கொள்ளுங்கொலோ!
இன்று வந்து இத்தனையும் அமுது
செய்திடப்பெறில், நான்
ஒன்று நூறாயிரமாகக் கொடுத்துப்
பின்னும் ஆளும் செய்வன்
தென்றல் மணம் கமழும்
திருமாலிருஞ் சோலை தன்னுள்
நின்றபிரான் அடியேன் மனத்தே
வந்து நேர்படிலே!"

மண வினையில் ஈடுபடுத்தும் மங்கள காரியத்தைத் தங்களுக்குச் செய்தால், நூறு தடா அக்கார அடிசில் முழங்கை வழி வார நெய்யும் பாலும் வெல்லமும் வெண்ணெயும் பிற பொருள்கள் பலவும் கலந்து படைப்பதுடன் அடிமைத்தொழிலும் செய்யக் காத்திருப்பதாக இப்பதிகத்தில் வேண்டிக் கொள்ளப்படுகிறது.

இப்பதிகத்தில் வேண்டிக் கொண்டபடியே இராமாநுசர் நூறு தடாஅக்கார அடிசிலும் நூறு தடா வெண்ணெயும் பிறவும் திருமாலிருஞ்சோலைப் பிரானுக்கு நிவேதித்தார்.

அண்ணன் போன்று இக் கைங்கர்யம் செய்ததால் இராமாநுசருக்குக் 'கோதைக்கு அண்ணன்' என்னும் காரணப்பெயர் வழங்கலாயிற்று.

அங்கிருந்தும் புறப்பட்டு ஆண்டாளின் அவதாரஸ்தலமாகிய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு இராமாநுசர் எழுந்தருளினார். அங்கெழுந்தருளியிருக்கும் பெருமாளைத் தரிசனம் செய்தார். பின்பு ஆண்டாள் சந்நிதி சென்று அன்புடன் வழிபட்டு நின்றார். அர்ச்சாவதார வடிவில் இருந்த ஆண்டாளும் சுயவடிவில் எழுந்தருளி "வாராய் எம் அண்ணலே!" என்று அழைத்து அனுக்கிரகம் புரிந்தார்.

இதனாலேயே "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே! என்னும் வாழித் திருநாமம் ஆண்டாளுக்கு ஓதப் படுகிறது.

அங்கிருந்தும் புறப்பட்டு ஆழ்வார்திருநகரி முதலான திவ்ய தேசங்களைச் சேவித்த வண்ணம் இராமாநுசர் தம் சீடர்களுடன் திருவரங்கம் வந்தடைந்து திருவரங்கம் பெருமானை வணங்கித் தம் மடம் சார்ந்தார். அவர் வருகையையறிந்து அங்குள்ளார் ஆனந்தக் களிப்புற்றனர்.

இராமாநுசரின் வருகை அறிந்து கூரேசர் தம் மனைவியுடன் அன்பு மகன் பராசரருடனும் திருமடம் சார்ந்து இராமாநுசரைக் கண்டு வணங்கி நின்றார். ஒருவரை யொருவர் கண்டு இருவரும் உள்ளங்குளிர்ந்தனர். அப்போது இராமாநுசருக்கு நூறு வயதுக்கு மேலாகியிருந்தது. கூரேசருக்கும் முதுமையால் உடல் தளர்வுற்றிருந்தது.

நாள்கள் சில சென்றன. முதுமையால் தளர்வுற்ற கூரேசர் தம் ஆசார்யரின் இருபாது கைகளையும் இதயத்தில் தரித்த வாறே திருநாட்டுக்கெழுந்தருளினார். பக்தர்கள் பலரும் துக்க மிகுதியால் கண்ணீர் சொரிந்தனர். கண்ணீர்ப் பெருக்குடன் நின்ற இராமாநுசர் அங்குக் கூடியிருந்தவர்களைப் பார்த்துக் கூறலானார்.

"அன்பர்களே! இனிக் கூரேசரின் குமாரரான பராசரரே உங்களுக்கு ஆசார்யரா வார். வைணவ சம

யத்தை நிலை நிறுத்தவல்லவர் இனி இவரே! தந்தையாரைப் போலவே இவரும் நுண்ணறிவும் பக்தியுணர்வும் அன்பு உள்ளமும் நிரம்பப் பெற்றவர்!"

இவ்வாறு கூறிய இராமாநுசர் பராசரரபட்டரைச் சிம்மாசனத்திருத்தி, மலர்க்கிரீடம் சூட்டி, மாலை அணிவித்து, வாழ்த்துக்கூறி வைணவ மந்திரம் ஓதுவித்தல் மூலம் அவரைப் பரிபூரணராக்கினார்.

காவிரிக்கரையில் கூரத்தாழ்வாரின் பூதவுடல் தகனம் செய்யப்பட்டது. வெகு தூரத்திலிருந்து வந்த பிராம்மணர்களும் இச்சடங்கில் கலந்து கொண்டு பகவத் நாம சங்கீர்த்தனம் செய்யலாயினர்.

உடையவரின் சீடர்கள் அனைவருமே உத்தமமானவர்கள். யாதவப்ரகாசர் சதித்திட்டத்திலிருந்து கோவிந்தர் இராமாநுசரைக் காப்பாற்றியதையும் காவிரியாற்றுச் சுடு மணலில் தான் படுத்துக்கிடந்து தம் மீது இராமாநுசரைக் கிடத்திக் கொண்ட கிடாம்பியாச்சானின் தியாகச் செயலையும் முன்பு கண்டோம்.

பெருமானைத் தரிசிப்பதைக் காட்டிலும், ஆசார்யராகிய இராமாநுசருக்குப் பால் காய்ச்சி அளிக்கும் கைங்கர்யமே சிறந்தது என்று வாழ்ந்து காட்டிய சீடராகிய ஆந்திரபூரணரின் தொண்டும் அற்புதமானது!

திருவேங்கடவன் திருவருளுக்குப் பாத்திரராகி அவர் துணையோடும் கருவுற்ற தன் மனைவியின் துணையோடும் திரு வரங்கத்தில் திருக்குளம் தோண்டி இன்றளவும் 'அனந்த சரசு' என்று நிலைக்குமாறு திருப்பணி செய்த அனந்தாச்சார்யரும் இராமாநுசரின் சீடரேயாவர்.

சீடர்கள் பலரும் உடையவர் பால் பெருங்காதல் கொண்டு பக்தி எனும் வெள்ளத்தில் ஆழ்ந்து பேரின்பம் கண்டதைப் போலவே இராமாநுசரும் தம் சீடர்கள் பால் அளவற்ற மரியாதையும் மதிப்பும் வைத்திருந்தார். தம் பால் அன்புமிகப் பெற்ற சீடர் ஒருவரின் ஸ்ரீபாத தீர்த்தத்தைத் தாம் உண்டதோடு தம் சீடர்களையும் உண்ணுமாறு செய்த வரலாறும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

திருநாராயணபுரத்திலிருந்தும் திரும்பிவந்த இராமாநுசர் இவ்வாறு ஏறக்குறைய இரு பதாண்டுகள் திருவரங்கத்தில் வாழ்ந்தார். அப்போது இராமாநுசருக்கு ஏறக்குறைய நூற்றிருபது வயது இருக்கும்.

சோழ மன்னன் தொல்லைக்கு அஞ்சி மேல்நாடு செல்வதற்கு முன்பும், திருநாராயணபுரத்திலிருந்து திரும்பித் திருவரங்கம் வந்ததற்குப்பின்புமாக மொத்தத்தில் ஐம்பதாண்டுகளுக்கு மேலாகத் திருவரங்கத் திருப்பணியில் இராமாநுசர் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்.

இதற்கிடையே எம்பெருமானார்க்கு ஆசார்யராக இருந்த ஐவரும் வைகுந்த பதவி அடைந்துவிட்டனர். அரசன், ஆண்டி, உயர்ந்தோர், தாழ்ந்தோர், ஆண்கள் பெண்கள், பெரியவர், சிறியவர் எனப் பலதிறப்பட்ட சீடர் குழாம் அப்பொழுது அவரைத் துதித்த வண்ணமும், தரிசித்த வண்ணமுமாக இருந்து வந்தது. வைணவ சமயத்தின் வளர்ச்சி கண்டு உடையவர் அளவிலா மனநிறைவும் ஆனந்தமும் கொண்டார். பிறவிப் பயனைத் தாம் பெற்றுவிட்டதாக எண்ணி மகிழ்ந்தார்.

"தென்னரங்கர் செல்வமுற்றும் திருத்தி வைத்தான் வாழியே!" என்று போற்றியதற்கு ஏற்ப இவர் செய்த திருப்பணிகள் எண்ணிலடங்கா. அவர் அன்று காட்டி வைத்த நெறிமுறைகளே இன்றும் வைணவத் திருக்கோயில்களில் கடைப்பிடிக்கப்பட்டு வழிபடப் பெறுகின்றன.

திருவரங்கத் திருக்கோயிலைச் சுற்றியும் பல்வேறு ஏற்பாடுகளை எம்பெருமானார் செய்தருளினார். தொழிலாளர்கள் பலருக்கும் கலைஞர்கள் பலருக்கும் வாழ்வளித்தார். திருக்கோவில்களிலும் திருவீதிகளிலும் வேதங்களை ஓதவும், திவ்யப் பிரபந்தங்களைப் பண்ணுடன் பாடவும் நெறிமுறைகளை ஏற்படுத்தினார்; சமய நூல்களை ஆராய்ச்சி செய்யவும் கூட்டங்கள் பலவற்றைக் கூட்டினார்.

திருவரங்கம் திருக்கோயிலைப் பழுதுபார்த்துச் செப்பனிடும் திருப்பணியைச் சிறப்பாகச் செய்து முடித்தார். தளிகைகளைத் தக்கபடித் தயாரித்து விநியோகிக்கவும் தக்க ஏற்பாடுகள் செய்தார்; மண்டபங்கள், நந்தவனங்கள், மலர்ச்சோலைகள், மருத்துவச் சாலைகள், நூல்நிலையங்கள் முதலியன ஏற்படுத்தி அவை சீராக நடைபெறவும் ஏற்பாடுகள் செய்தார்; சோழச் சிற்றரசன் அகளங்கன் என்பவனிடம் திருக்கோவில் நிர்வாகப் பொறுப்பை ஒப்படைத்தார். இவ்வாறு பலதுறைகளிலும் திருவரங்கன் திருக்கோயிலைச் செம்மையுறச்

செய்து நிலைத்த நிர்வாகத் திறனுக்கும் வழி அமைத்துக் கொடுத்தார்.

திருவரங்கப் பெருமானுக்குத் திருப்பணிகள் பல செய்ததோடு நிர்வாகத்திற்கு வேண்டிய செல்வங்கள் வந்து குவியவும் வழி வகுத்துத் தந்த இராமானுசரின் திருப்பணி என்றும் நிலைத்து நிற்கத் தக்கதே!

## அர்ச்சையில் அருள்கிறார்

உலகில் நிலவிவந்த சமயங்களின் கருத்துக்களை எல்லாம் கற்றறிந்து, அவற்றின் சாரங்களைக் காட்டிலும் அற்புதமான கருத்துக்களை உள்ளடக்கியதாகிய வகையில் வைணவ தர்சனத்தை இராமானுசர் நிறுவினார். திருவரங்கர் செல்வ மணத்தையும் திருத்தமுறப்ப யன்படும் வகையில் நெறிப்படுத்தினார். நால்வேதப் பொருள்கள் அனைத்தையும் நயமுற எடுத்துரைத்தார். நம்மாழ்வார் தமிழ் மறையை நானிலம் முழுதும் பரப்பினார். இப்படி எண்ணற்ற அரும் பெரும் பணிகளை இவ்வுலகோர் துய்த்து உய்வு பெறுமாறு நூற்றிருபது ஆண்டுகள் இந்நிலவுலகில் வாழ்ந்தார். பிரம்மசூத்திரத்துக்கு அவர் அருளிய ஸ்ரீபாஷ்யம் நுண்ணறிவு மிக்கவர்க்கெல்லாம் நல் விருந்தாக அமைந்தது.

முதுமையில் தளர்ச்சியுற்ற காலத்திலும் இராமானுசர் தம் சீடர்களையெல்லாம் கூட்டி வைத்துக் கொண்டு பாடம் சொல்லி வந்தார். வழக்கமாக இவர் பாடம் சொல்லி வருங்கால் ஒருநாள் திடீரென்று மௌனத்தில் ஆழ்ந்தார். அவர் கண்களிலிருந்தும் இரண்டு சொட்டு இரத்தம் வந்தது. சிறிது நேரம் கழிந்த பிறகே அவர் தம் சுயநிலைக்குத் திரும்பினார். அப்போது எதிரிலிருந்த சீடர்கள் அவரின் இந்த நிலைக்குக் காரணத்தை அறிவித்து உதவுமாறு அன்புடன் வேண்டிக்கொண்டனர்.

“சீடர்களே! திருப்பெரும்புதூர்வாழ் அன்பர்கள் வேதத்துக்கு இசைந்த வகையில் என்னுடைய திருவுருவத்தைச் சமைத்து நிறுவுதல் செய்துகொண்டிருக்கின்றார்கள். விசாலமான மண்டபம் ஒன்றில் அவ்விக்கிரகத்திற்கு அன்புடன் உயிரூட்டிக் கொண்டிருந்தார்கள். அதன் காரணமாகவே நான் சுய நினைவு இழந்திருந்தேன். தற்போது தான் என் சுய உணர்வுக்குத் திரும்பினேன்!”

இவ்வாறு தன் சிலை ஒன்று ஸ்ரீபெரும்புதூரில் நிறுவப்பட்ட நிகழ்ச்சியைத் தம் ஞானப் பார்வையால் உணர்ந்து தம் சீடர்களுக்கு இராமாநுசர் எடுத்துக் கூறினார்.

இதற்கு முன்பும் இராமானுசருக்குச் சிலை ஒன்று யாதவ புரியில் நிறுவப்பட்டது. பன்னிரண்டாண்டுகள் பழகிய பின்னர் பிரிந்து செல்ல முற்பட்ட இராமாநுசருக்குத் திருநாராயணபுரமக்கள் அவரின் நினைவாகச் சிலை அமைத்துக் கொள்ள அன்புடன் வேண்டிக்கொண்டனர்.

“என் உயிரினும் மேலான அன்பர்களே! இவ்வளவு நாளும் உங்களுடன் நான் அன்புடன் பழகி வந்தேன்! என்னைப் பிரிய வேண்டுமே என்ற கலக்கம் உங்களுக்கு எதற்கு? என் நினைவாக உங்கள் விருப்பப்படியே விக்கிரகம் ஒன்றை அமைத்துக் கொள்ளுங்கள். இவ்விக்கிரகத்தைக் காணும் போதெல்லாம் உங்களுக்கு மனச்சாந்தி பிறக்கும்” என்று அருளிச்செய்த பிறகுதான் திருநாராயணபுரத்திலிருந்து திருவரங்கம் புறப்பட்டார் இராமானுசர்.

திருவரங்கத்தில் எழுந்தருளியிருந்து தம்மைக் காணவந்த அன்பர்கட்கெல்லாம் அருளமுதத்தை உபதேசித்து வந்தார் உடையவர். மனச்சாந்தி பெறவும் மனத்தூய்மை பெறவும் வேண்டித் தொலைவிலிருந்தும் மக்கள் அணிஅணியாக வந்து தரிசனம் செய்து சென்றவண்ணமிருந்தனர். இராமாநுசர் இருந்து அருள்புரிந்த காரணத்தால், திருவரங்கத்துக்கு மேலும் தெய்வீகம் கூடிற்று! பூலோக வைகுந்தமாகக் காட்சியளித்தது.

தம்முடைய சீடர்கள் சீலமும் ஞானமும் விளங்கப்பெற்று வைகுந்த வாழ்வை மண்ணுலகிலேயே அனுபவித்து மகிழ்தலைக் கண்டு உடையவர் மன நிறைவடைந்தார். இந்நிலையில் தம் பிறவி நோக்கம் ஈடேறியதாகக் கருதினார். எனவே, தம்முடைய சிந்தனைகள் அனைத்தையும் ஒருமுகப் படுத்தி யோகநிலையை மேற்கொண்டார்.

உடையவரது மோனநிலையும், யாரிடமும் எதையும் கூறுமல் இருக்கும் ஏகாந்த நிலையும் சீடர்களுக்கு மனக்கலக்கத்தை உண்டாக்கியது. எனவே, சிலர் வாய்திறந்து அழவும் ஆரம்பித்துவிட்டனர். இந்நிலையில் உடையவரது மோன நிலை கலைய ஆரம்பித்தது. சீடர்

களின் இரக்க உணர்வினால் நிலைகுலைந்து போயிருக்கும் நிலைமையைக் கண்டார்.

"அன்புக்குரிய என் செல்வர்களே! குழந்தைகளைப் போன்று ஏன் வருந்துகிறீர்கள். என் பிறவிப் பயனை நான் அடைந்துவிட்டேன். எனவே, என் வேலை முடிந்துவிட்டது என்று எண்ணுகிறேன்!"

இவ்வாறு இராமாநுசர் கூறவும் கூடியிருந்த அனைவரும் கதறிக் கதறி அழ ஆரம்பித்துவிட்டனர்.

"குருநாதா! தங்களைக் காணாது நாங்கள் எவ்வாறு உயிர் வாழ்வோம்! எங்களுக்குத் தாய், தந்தை, செல்வம், குரு முதலான அனைத்தும் தாங்களே! எனவே, எங்கள் பொருட்டு மேலும் சில காலம் உயிரோடிருந்து எங்களைக் காத்தருள வேண்டுகிறோம்!" என்று சீடர்கள் உருக்கமுடன் வேண்டிக்கொண்டனர்.

பிரியமுள்ள உயிருக்குயிரான சீடர்களின் வேண்டுகோளுக்கு இராமாநுசர் இசைந்தார். மேலும் மூன்று தினங்கள் பூவுலகில் உயிர் வாழ்வதாக ஆறுதல் கூறினார். தாம் அருளிச் செய்த "உபதேச ரத்தினமாலை" யினைச் சீடர்களுக்கு அளித்தார். இதனால் அனை வரும் பெறுதற்கரிய பிறவிப் பயன் பெற்றதாகக் கருதி மகிழ்ந்தனர்

தம் சீடர்களையும், தம்மைத் தரிசித்தவர்களையும் ஞானச் செல்வம் நிரம்பப் பெற்றவராக்கி அருள் புரிந்தார், இராமாநுசர். அவருடைய தரிசனத்தை நேரில் பெறவும் அருளமுதம் பருகவும் ஆயிரக்கணக்கானோர் அவர்தம் திருமடத்துக்கு வந்தவண்ணம் இருந்தனர்.

"அன்பர்களே! என்பால் கொண்ட அன்பால் நீங்கள் நாள்தோறும் என்னைக் காண வருகின்றீர்கள்! அஞ்ஞானம் நீங்கப்பெற்று ஞானவான்களாகக் காட்சியளிக்கும் உங்களைக் காணும் போது நான் ஆண்டவனையே நேரில் கண்டதாகக் கருதி மகிழ்ச்சி அடைகிறேன். பகவானும் பக்தர்களும் வெவ்வேறானவர் அல்லர்! உங்களுக்குள் அடியேனும், அடியேனுள் நீங்களும் எப்போதும் இருந்துகொண்டே வருகிறோம்! எனவே, அழியும் இவ்வுடலைக் குறித்து அல்லல்படுவானேன்? என்று அருள்நோக்கோடு தம் சீடர்களுக்கு அறிவுரை அருளினார் இராமாநுசர்! இதுகேட்டுக் கோவிந்தர், வடுகநம்பிகள், முதலியாண்டான் முதலானோர் பெரிதும் துக்கித்தனர்.

"குருநாதரே! தேவரீர் எக்காலத்தும் இருக்கத்தக்கவர்! எங்கள் உடல் அநித்தியமானது! அடியவர்களாகிய நாங்களும், எங்களின் சந்ததியினரும் இவ்வுலகுள்ளளவும் தங்களைச் சரீரத்தோடு தரிசிக்கும் பாக்கியம் தந்தருள வேண்டும்!" என்று வேண்டிக் கொண்டனர்.

பக்தர்களின் விருப்பப்படியே மூன்றே நாட்களில் இராமாநுசரின் சிலை வடிவம் கைதேர்ந்த சிற்பியரால் வடிக்கப்பட்டது. அதனைத் திருக்காவேரியில் நன்னீராட்டிப் புனிதமடையச் செய்து பீடம் ஒன்றில் நிறுத்தினர். அவ்விக்கிரகத்தை முகர்ந்து தம் உயிர்ப்பை அதில் பிரதிஷ்டை செய்தார் இராமாநுசர்!

"சீடர்களே! என்னுடைய மற்றொரு வடிவமே இது! எனக்கும் இம்மூர்த்திக்கும் யாதொரு வேறுபாடும் இல்லை!" என்று கூறியவாறே கோவிந்தரின் மடிமீது தம்முடியை வைத்தும், ஆந்திர பூரணரின் மடிமீது தம் மலரடிகளை நீட்டி தம் குருநாதரான மகாபூரணரின் பாதுகைகளை நோக்கியவாறே இராமாநுசர் பரமபதப்பேறு அடைந்துவிட்டார்!

வைணவச் சீடர்கள் யாவரும் பராசரரின் அருளாணைப்படி இராமாநுசரின் தெய்வீகச் சிலை வடிவின் அருள்துணையினால் இராமாநுசர் கடைப்பிடித்து வந்த கைங்கர்யங்களைப் புரிந்து வந்த வண்ணம் தம் வாழ்நாளைக் கழித்தனர்.

சீராரும் யதிராசர் திருவடிகள் வாழி!
திருவரையில சாத்தியசெந்
துவராடை வாழி!
ஏராரும் செய்வடி வெப்போதும் வாழி!
இலக்கியமுந் நூல்வாழி!
இணைத்தோள்கள் வாழி!
சோராத துய்ய செய்ய முகச்சோதி
வாழி!
தூமுறுவல் வாழி! துணை
மலர்க்கண்கள் வாழி!
ஈராறு திருநாமம் அணிந்த
எழில் வாழி!
இனிதிருப்போ டெழில்ஞான
முத்திரை வாழியே!

ஸ்ரீராமாநுஜர்
திருவடிகளே சரணம்.

முற்றும்.



Edited and Published on behalf of T.T. Devasthanams by N.S. Rama Murthy, M.A., and Printed at T.T.D. Press by M. Lakshmana Rao, B.A., L.P.T., Manager, T.T.D. Press, Tirupati - 517 507



# ஸ்ரீ வேங்கடேஸ்வரா
# வன மேம்பாட்டுத் திட்டங்கள்

மனித மனம் என்றென்றும் மகிழ்ச்சியும், அதிசயமும் கொள்ளும் வகையில் காடுகள் ஆண்டாண்டு காலமாக விளங்கிவருகின்றன. இயற்கையின் ஆற்றலுக்கும் அழகுக்கும் என்றென்றும் புதுப்பொலிவும், புதுப்பொருளும் அளித்து வருவன காடுகளாகும்.

இத்தகு விலைமதிப்பற்ற இயற்கை வளத்தை புனிதமிகு திருமலையில் பாதுகாத்திடும் வகையில் 1981ஆம் ஆண்டு 'காடு வளர்ப்புத் திட்டம்' ஒன்றினை பெருமளவில் பெருமுயற்சியுடன் ஒரு புனித வேள்வியாக மேற்கொண்டு பல்வேறு இனங்களைச் சேர்ந்த சுமார் 25 லட்சம் மரங்களை திருப்பதி மற்றும் திருமலையில் வளர்க்கும் பணியில் தி.தி. தேவஸ்தானம் ஈடுபட்டது. இதன் மூலமாக திருமலை மலைச்சரிவுகள், திருப்பதி நகரம் ஆகிய பகுதிகள் யாவும் பசுமையான 'வனச் செல்வத்துடன்' விளங்கிடவேண்டும் என்பதே திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் பெருவிருப்பமாகும்.

துவக்கப்பட்ட திட்டத்தின் பெருவெற்றியின் தூண்டுதலினால் தற்போது திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல்வேறு திட்டங்களைப் புகுத்தியுள்ளது. அதுதான் "ஸ்ரீவேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத்திட்டம்". இத்திட்டத்தினால், திருமலை திருபப்தி தேவஸ்தானம் மேற்கொண்டுள்ள இப்புது முயற்சிகளில் யாத்திரிகப் பொதுமக்களும் பங்கேற்கும் வகையில் வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன. மேலும், இத்திட்டத்திற்கு நன்கொடை வழங்கும் பக்தர்களுக்கு பலவிதமான நன்மைகளும் செய்யப்பட்டுள்ளன. இந்த 'வேங்கடேஸ்வரா காடு மேம்பாட்டுத் திட்டத்தின்' முக்கிய விவரங்கள் பின்வருமாறு:-

### விருக்ஷ ஸம்வர்த்தனம்
நன்கொடை ரூ. 25,000

(மரம் வளர்ப்புத் திட்டம்)

இத்திட்டத்தின் கீழ் 500 செடிகள் திருமலை மற்றும் திருப்பதியில் நடப்படும். இத்திட்டத்திற்கு நன்கொடை அளிக்கும் நபரின் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் இம்மரங்கள், இச்செடிகள் அழைக்கப்படும். இச்செடிகள் ஐந்தாண்டுகளுக்கு பராமரிக்கப்படும்.

### விருக்ஷ பிரஸாதம்
நன்கொடை : ரூ. 15,000

இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆண்டும் பயன்தரக்கூடிய 100 பழ அல்லது மலர் விதைகள் நன்கொடையாளர் அல்லது அவர் விரும்பும் நபரின் பெயரில் 10 ஆண்டுகளுக்கு விநியோகிக்கப்படும்.

### ஸ்மாரக வனாறு (நினைவு மரங்கள்)
நன்கொடை : ரூ. 5,000

இத்திட்டத்தின் கீழ் திருமலை-திருப்பதி மலைச்சரிவுகளில் உள்ள தோப்பு ஒன்றில் அங்கு விளையக்கூடிய ஒரு குறிப்பிட்ட 10 மரவகைகள் நடப்பட்டு, 5 ஆண்டுகள் அவை பராமரிக்கப்படும். நன்கொடையாளரின் பெயர் அத்தோப்பிற்கு வைக்கப்படும்.

### வன சம்ரக்ஷண பாகஸ்வாம்யம்
நன்கொடை : ரூ. 2,000

(காடு வளர்ப்பில் நும் பங்கு)

இத்திட்டத்தின் கீழ் ஏழுமலைகளில் இயற்கையான காட்டுச் சூழ்நிலை பாதுகாத்து மேம்படுத்தப்படும். இத்திட்டத்தில் பங்கேற்கும் நன்கொடையாளரின் ஆர்வத்தை நினைவுகூறும் வகையில் அவர்தம் பெயர் தேர்ந்த இடத்தில் காட்சியாக்கப்படும்.

சலுகை மாற்றங்களுடன் கூடிய இப்புதிய ஸ்ரீவேங்கடேஸ்வரா வன மேம்பாட்டுத் திட்டம் 1-2-96 முதற்கொண்டு செயல்படும். 31-1-96 தேதிக்கு முன்பு வரை இத்திட்டத்திற்கென நன்கொடை வழங்கிய பக்தர்கள், இத்திட்டத்திற்கென முன்பு அளிக்கப்பட்ட சலுகைகளைப் பெறுவர். நன்கொடை அளிக்கப்படும் மேற்படி தொகைகளுக்கு பிரிவு 35 CCB-இன் கீழ் 100 சதவிகிதம் வருமானவரி விலக்கு உண்டு.

<u>கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்புங்கள்</u>

THE EXECUTIVE OFFICER, T.T. DEVASTHANAMS - TIRUPATI-517501.

